# தர்மசக்கரம்





பிங்கள ஹ மாசி மீ சக்கரம் 27 ஆரம் 2

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா

# செய்ந்நன்றி மறவாமை

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது

— திருக்குறள்

நமக்கு உதவி புரிந்தவர்களுக்குப் பதிலுதவி செய்ய விரும்புகிறோம். உதவிபுரிவது தம் கடமை என்று உணர்ந்தவர்கள் பதிலுதவியாகப் பணத்தையோ பொருளையோ ஏற்கமாட்டார்கள். உங்கள் பெயரால் டிபாஸிட் சந்தா ஒன்று வைத்துக்கொண்டு அன்னவர்களுக்கு மாதந்தோறும் தர்ம சக்கரம் இதழ் போய்ச்சேரும்படிச் செய்யலாம். அவர்கள் இதை அருட் பிரசாதமாக ஏற்றுப் பயன்படுத்துவார்கள். இது செய்ந்நன்றி மறவாமை மட்டுமல்லாமல் மாதந்தோறும் உங்களை அவர்களுக்கு ஞாபகப்படுத்து கிறது. நாமும் நமக்கு உதவி புரிந்தவர்களை ஆத்மிகத்தில் ஈடுபடுத்திய பாக்கியம் பெற்றவர்களாவோம்.

## சந்தா விவரம்

### 1. டிபாஸிட் சந்தா ரூ. 100

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

### 2. ஆண்டு சந்தா ரூ. 10

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

### 3. சகாய சந்தா ரூ. 5

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்துகொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன் படுத்த வேண்டாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளி நாடு வருட சந்தா ரூ. 20-00**

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | பிங்கள ௵ மாசி ீ | ஆரம் 2 |
| --- | --- | --- |

பொருளடக்கம் பக்கம்



## அந்தர்யோக விவரங்கள்

திருச்செந்தூரில் 4, 5—3—78 சனி, ஞாயிறு ஆகிய தினங்களில்

இடம்: ஆதித்தனர் கல்யாண மண்டபம்

நேரம்: விடியற்காலை 5-00 மணி முதல் இரவு 10-00 மணிவரை
வழக்கமான சாதனை முறைப்படி.

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

இதரவிவரங்கள்: உணவு, ஜாகைக்காக நபர் ஒன்றுக்கு ரூபாய் 12-00ஐ மார்ச்சு மாதம் 2ஆம் தேதிக்குள் திரு. S. K. S. ராஜமணிநாடார், 65 C, தெற்கு ராஜவிதி, தூத்துக்குடி, திருநெல்வேலி மாவட்டம் என்ற விலாசத்திற்கு மணியார்டர் மூலமோ, நேரிலோ, செலுத்திப் பெயர்களை 2—3—78க்குள் பதிவு செய்து கொள்ளவேண்டும். பணம் அனுப்பி கலந்துகொள்ளாத அன்பர்களுக்குத் தொகை திருப்பித்தர இயலாது. தாய்மார்களுக்குத் தங்க தனி இடவசதி உண்டு. 3—3—78 வெள்ளிக்கிழமை மாலை 5 மணிக்குள் திருச்செந்தூர் ஆதித்தனர் கல்யாண மண்டபத்திற்கு அன்பர்கள் வந்து சேர வேண்டும்.

5—3—78 அன்று மாலை 5 மணிக்கு அந்தர்யோகம் முடிவுபெறும். தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவற்றைத் தாங்களே கொண்டுவர வேண்டும்.

[பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**சேலம் ஜில்லா—வளவாசியில் 17—2—78 வெள்ளிக்கிழமை**
இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தவ இல்லம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 19—2—78 ஞாயிற்றுக்கிழமை**
இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 19—2—78 ஞாயிற்றுக்கிழமை**
இடம்: பெரியகாளியம்மன் கோவில்
நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—சிவகாசியில் 25—2—78 சனிக்கிழமை**
இடம்: சாத்தூர் ரோட்டிலுள்ள அன்னை சாரதாமணி பால்வாடி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**ராமநாதபுரம் ஜில்லா—அழகன்குளத்தில் 26—2—78 ஞாயிற்றுக்கிழமை**
இடம்: அழகன்குளம் அருள்மிகு திருநாவுக்கரசு சுவாமிகள் ஆலயம்
நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 5-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்
உணவு வசதி: பகல் உணவுக்கு நேரில் ரூ. 1-00 செலுத்தி டிக்கட் பெற்றுக் கொள்ளலாம்.
ராமநாதபுரத்திலிருந்து அழகன்குளத்திற்கு அடிக்கடி பஸ்கள் இருக்கின்றன.

**மதுரை ஜில்லா—தேனியில் 1—3—78 புதன்கிழமை**
இடம்: ஸ்ரீ கணேச கந்தப்பெருமாள் ஆலயம்
நேரம்: காலை 9-00 மணிமுதல் மாலை 4-00 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடி 5—3—78 ஞாயிற்றுக்கிழமை**
இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சிட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

**ராமநாதபுரம் ஜில்லா—அருப்புக்கோட்டையில் 5—3—78 ஞாயிற்றுக்கிழமை**
இடம்: S.B K. பெண்கள் உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்




# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

| சக்கரம் 27 | பிங்கள ஸூ மாசி மீ | ஆரம் 2 |
| --- | --- | --- |

## பிரார்த்தனை

हे विश्वनाथ शिव शंकर देवदेव गङ्गाधर प्रमथनायक नन्दिकेश ।
वाणेश्वरान्धकरिपो हर लोकनाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥

— शंकराचार्यः

ஹே விஸ்வநாத சிவ சங்கர தேவதேவ
கங்காதர ப்ரமதநாயக நந்திகேச ।
பாணேஸ்வராந்தகரிபோ ஹர லோகநாத
ஸம்ஸார துக்ககஹநாஜ் ஜகதீச ரக்ஷ ॥

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

— திருநாவுக்கரசர்

# அருள் விருந்து

தூய உள்ளத்தில் தெய்விகம் திகழ்கிறது.

அகிலாண்டத்தையும் ஆளவல்லது அறம்.

கோழைத்தனத்திற்கு நிகரான பாபம் இல்லை.

வாழ்வை உயர்நிலைக்கு உயர்த்துவது சத்தியம்.

தூய அன்பு ஓங்குதற்கேற்ப ஆனந்தம் மேலிடுகிறது.

மனதைப் பண்படுத்துவது செயல்களுளெல்லாம் சிறந்த செயலாம்.

மடிவது எளிது. உயர்ந்த இலட்சியத்துக்கு வாழ்வதோ மிகக் கடினம்.

கர்ப்பத்தடை சிசுக்கொலைக்கு நிகர்; பிரம்மச்சரியமோ அருள் நிறைந்தது.

நன்னெறி கடைப்பிடிப்பதால் வருகிற சிறுமையைச் சிறுமையாகக்கருதாதே.

இறைவனுக்குச் சொந்தமாகின்றவன் உலகம் முழுதுக்கும் சொந்தமாகின்றான்.

திருடன் பொருளை அபகரிக்கிறான். குடிகாரனோ மானத்தைப் பலிகொடுக்கிறான்.

உலகத்தவர் பகட்டையும் சான்றோரது நேர்மையையும் சமரசப்படுத்த முடியாது.

துக்கம் என்னும் நோயைப் பரப்பவேண்டாம்; மகிழ்வு என்னும் சீர்மையை வளர்த்திடுக.

மன்னுயிரை விடத் தான் மேலானவன் என்று எண்ணுபவன் ஒருநாளும் மேலானவன் ஆகான்.

என் உள்ளத்தை இறைவா, உனக்குச் சொந்தமாக்குகின்றேன். உனக்கே அது ஆட்பட்டிருப்பதாகுக.

தூய்மையில் பகட்டு ஏதுமில்லை. நலனுக்கும் கேட்டுக்குமிடையிலுள்ள போராட்டம் என்றென்றும் சாசுவதமானது.

பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

உபநியாயாதிபதி: "ஐயனே நாங்கள் கிருஹஸ்தர்கள். உலகக் கிருத்தியங்களை எவ்வளவு காலத்துக்கு நாங்கள் நிறைவேற்றி வரவேண்டும்?"

பரமஹம்சதேவர்: "உங்களுக்கு உலகக் கடமைகள் பல உள என்பது முற்றிலும் மெய். உங்களுடைய குழந்தைகளை நீங்கள் நல்ல முறையில் பேணிவரவேண்டும். மனைவிமார்களைக் காப்பாற்றுவது உங்களுடைய கடமை. எதிர்பாராது மரணம் வந்து வாய்க்குமிடத்தும் மனைவி மக்களுக்கு எதிர்காலத்தில் இன்னல் ஏற்படாதபடி பணம் சேமித்து வைக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். அத்தகைய பொறுப்பைப் புறக்கணிப்பது ஒவ்வாது. புறக்கணிப்பவனைக் கல்நெஞ்சக்காரன் என்று நான் கருதுவேன். பிரபஞ்ச உணர்வை முற்றிலும் கடந்திருந்த சுகதேவர் போன்ற சான்றோர்களே உலக மக்களோடு இணக்கம் பூண்ட பொழுது அவர்கள் கருணையே வடிவெடுத்திருந்தனர். கருணை படையாத மனிதனை மனிதன் எனக் கருதலாகாது."

உபநியாயாதிபதி: "குடும்பி ஒருவன் தன்னுடைய புதல்வர்களை எவ்வளவு காலத்துக்குக் காப்பாற்றவேண்டும்?"

பரமஹம்சதேவர்: "புதல்வர்களுக்குத் தக்க வயது வரும்வரையில் அவர்களைப் பாதுகாக்க வேண்டும். கோழி ஒன்றன் செயலைப் பாருங்கள். அதன் குஞ்சுகள் தமக்குத் தாமே உணவுதேடிக்கொள்ளும் பக்குவத்தை அடைந்தான பிறகு தாய்க்கோழி அவைகளை விரட்டி ஓட்டுகிறது. தன் பக்கத்தில் வர அவைகளுக்கு அது அனுமதி கொடுக்காது." (எல்லாரும் நகைக்கின்றனர்)

உபநியாயாதிபதி: "குடும்பி ஒருவன் தன் மனைவிக்கு எப்படிக் கடமைப்பட்டிருக்கிறான்?"

பரமஹம்சதேவர்: "மனைவிக்குக் கணவன் தெய்வ பக்தியை ஊட்டவேண்டும். தன் ஆயுள் காலம் முழுதிலும் மனைவியைக் காப்பாற்றிவர அவன் கடமைப்பட்டிருக்கிறான். தன் காலத்திற்குப் பிறகும் அவளுடைய கால க்ஷேமத்திற்காக ஏற்பாடு செய்ய அவன் கடமைப்பட்டிருக்கிறான்.

"ஆத்ம சாதகனொருவனுக்கு அருள்தாகம் மேலோங்கியிருக்குமாகில் அல்லது கடவுளைப் பற்றிய ஞானத்தில் முன்னேற்றம் அடைந்திருப்பானாகில் அவனுக்கு உலகக் கடமை ஏதுமில்லை. உலக வாழ்க்கையில் அவனுக்குத் தேவையாயிருப்பவைகளைக்கடவுள்தாமேநிறைவேற்றி வைக்கிறார். கடவுள் ஞானம் அடைந்திருப்பதற்கிடையில் உலகக் கிருத்தியங்களையும் முறையாகக் கவனிக்கும் பாங்குடையவர்கள் சிலர் இருக்கின்றனர். அவர்கள் விஷயத்தில் கடவுளின் உதவியைப் பற்றிய கேள்வி எழ இடமில்லை. பரபோதத்தில் மேலோங்கி இருப்பவனுடைய குடும்பக் காரியங்களைக் கவனிக்க அவனுக்கு இயலாது போய் விடுமாகில் தெய்வாதீனமாக அக்காரியங்கள் தாமாகவே இனிது நிறைவேறுகின்றன. மிராசுதார் ஒருவனுடைய மகன் சின்னஞ்சிறு வயதிலிருக்கிறபொழுதே அவன் காலமாகி விடுவானாகில் அவனுடைய மகனையும் சொத்துச் சுகங்களையும் கவனித்துக் கொள்வதற்குக் காப்பாளன் ஒருவனை நீதிமன்றம் நியமிக்கிறது. இவையாவும் மானுட வாழ்க்கையைப் பற்றிய கோட்பாடுகளாம். இவைகளைப்பற்றி நீர் அறிந்திருக்கின்றீர்."

உபநியாயாதிபதி: "ஆம் ஐயனே."

விஜயன்: "ஆ! மாணிக்கம் போன்ற மொழிகளைப் பகர்கின்றீர்கள். கடவுள் நாட்டத்திலே ஆழ்ந்து மூழ்கியிருப்பவனுடைய குடும்ப நிர்வாக சம்பந்தமான பொறுப்புகளையெல்லாம் கடவுள் தாமே எடுத்துக் கொள்ளுகின்றார் என்று சொல்லுகின்றீர். இக்கூற்றைக் கேட்பதற்கே பரமானந்தமாக இருக்கிறது. கடவுள் பித்தம் தலைக்குமேல் ஏறியிருப்பதுதான் கிடைப்பதற்கு அரிய வாய்ப்பு ஆகிறது. வயது முதிராத இளைஞனொருவன் தந்தையை இழந்துவிடுங்கால் காப்பாளன் ஒருவனைப் பற்றி நினைக்க அச்சிறுவனுக்கு இயலுவதில்லை. அப்படியிருந்தும் அவனுக்குக் காப்பா

என் ஒருவன் அமைகின்றான். கடவுள் அருளும் அத்தகையது. எத்தகைய மேலாம் கோட்பாடு இது! அத்தகைய சீரிய மனநிலை எனக்கு வாய்க்கும் நாள் எந்நாளோ? அருள்தாகம் ஓங்கப் பெற்றிருக்கின்றவர்கள் பாக்கியவான்களேயாம்!"

விஜயன்: "ஐயனே, உலகக் கிருத்தியங்களில் ஈடுபட்டிருப்பதற்கிடையில் பரமனைப் பற்றிய மெய்ஞ்ஞானம் வாய்க்கப்பெறுவது எப்பொழுதாவது சாத்தியப்படுமா? இங்கு இம் மண்ணுலகில் வாழ்ந்திருக்கும் பொழுதே கடவுள்சாட்சாத்காரம் பெறுவதுசாத்தியமா?"

பரமஹம்சதேவர் (புன்னகை பூத்தவராக): "நீர் ஏன் கவலைப்படுகின்றீர்? நீர் இப்பொழுதே பாகையும் கற்கண்டையும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றீர். (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்.) இவ்வுலக இன்பங்களை அனுபவித்துக்கொண்டு இங்கு வாழ்ந்திருக்கின்றீர். அதற்கிடையில் கடவுள் சிந்தனையிலும் கருத்தைச் செலுத்தி வருகின்றீர். அது உண்மையல்லவா? இவ்வுலகில் வாழ்ந்திருக்கும் பொழுதே கடவுள் சாட்சாத்காரத்தை மானுடனொருவன் ஏன் பெறலாகாது. நிச்சயமாகவே அதை அவன் பெற முடியும்."

திரைலோக்கியர்: "குடும்ப வாழ்க்கை வாழ்ந்துகொண்டிருக்கிற ஒருவன் கடவுளைப் பற்றிய ஞானம் அடையப்பெறுவானாகில் அதன் அறிகுறிகள் எப்படியிருக்குமோ?"

பரமஹம்சதேவர்: "கடவுள் ஞானம் அடையப் பெற்றவனுக்கு இன்பக் கண்ணீர் தானாக ஊற்றெடுக்கும். கடவுளைப்பற்றிய பேச்சை எடுக்கிறபொழுதே அவனுக்கு உடலில் புளகாங்கிதம் ஏற்படும். உரோமம் சிலிர்க்கும். கடவுளின் திருநாமத்தைக் கேட்கும்பொழுதே அவனுக்குத் தெவிட்டாத தித்திப்பு உண்டாகிறது. உடலெங்குமுள்ள மயிர் கூச்செடுக்கிறது. ஆனந்தம் ததும்பிக்கொண்டு வருகிறது. கன்னங்களின் மீது கண்ணீர் முத்து முத்தாக உருண்டு வருகிறது. உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கின்ற மானுடனொருவன் 'காமத்தையும் காசு ஆசையையும் அறவே அகற்றிவிட முடியாது. தேகாத்ம புத்தி அல்லது உடலைத் தான் என்று எண்ணுகிற எண்ணம் எளிதில் அவனைவிட்டுப் போகாது. அன்னவன் எவ்வளவுக்கெவ்வளவு உலகப் பொருள்களின் மீது வைத்துள்ள பற்றுதலை ஒதுக்கித் தள்ளுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு கடவுள் ஞானத்தில் அவன் முன்னேற்றம் அடைகின்றான். அன்னவனுக்கு மேலும் உடல் ஞாபகமும் சிறிது சிறிதாகக் குறைந்துபட்டுப் போகின்றது. என்றைக்கு உலகப்பற்றுக்களெல்லாம் அன்னவனை விட்டு அறவே அகன்று போகின்றனவோ அன்றைக்கு அவன் கடவுள் ஞானத்தை அடையப் பெறுகின்றான். அதன் பிறகு உடல் வேறு ஆத்மா வேறு என்னும் பேருணர்வை அவன் அடைகிறான். தேங்காய் ஒன்றனுள் தண்ணீர் இருக்கிற பொழுது உள்ளே இருக்கும் பருப்பை ஓட்டினின்று கத்தியைக்கொண்டு எளிதில் பிரித்தெடுக்க முடியாது. ஆனால் உள்ளே இருக்கும் நீர் உலர்ந்துபோய் அது கொப்பறையாக வடிவெடுக்கும்பொழுது மேலோட்டினின்று அது தானாகப் பிரிந்துகொள்ளுகிறது. கொப்பறையை அசைத்துப் பார்த்தால் உள்ளே அது அசைவதனுடைய சப்தம் கேட்கும். அந்நிலையை எட்டுகிறபொழுதே அது தேங்காய் என்னும் பெயரைப் புறக்கணித்து விட்டுக் கொப்பறை என்னும் பெயரைப் பெறுகிறது.

ஈசுவர அனுபூதி வாய்க்கப்பெற்ற மானுடனொருவன் கொப்பறைக்கு நிகராகிறான். மேல் ஓட்டுடன் அது ஒட்டுவதில்லை. அதேவிதத்தில் அனுபூதிமான் உடல் உணர்ச்சியில் ஒட்டியிருப்பதில்லை. உடலைப்பற்றிய எண்ணமும் அவனிடத்தில் உண்டாவதில்லை. உடலில் உண்டாகின்ற நலனும் கேடும் அவனுடைய பேருணர்வைத் தொடுவதில்லை. உடலை ஒட்டிய இன்ப துன்பங்களுக்கு அவன் அப்பாற்பட்டவன். உடலுக்குத் தேவையான சொகுசுகளை அவன் நாடுவதில்லை. ஜீவன் முக்தனாக அல்லது முற்றிலும் விடுதலையடையப்பெற்றவனாக உலகில் அவன் சஞ்சரிக்கிறான். பரம்பொருளிடத்து தீவிர பக்தி வைக்கின்றவன் ஜீவன் முக்தனாகின்றான். அவன் யாண்டும் பரமானந்தத்தில் திளைத்திருக்கின்றான்.

பரம்பொருளை அடையப்பெற்றவனிடத்துச் சில அடையாளங்கள் இருக்கின்றன. இறைவ

னுடைய திருநாமத்தைக் கேட்கின்றபொழுதே அவனுடைய கண்களினின்று ஆனந்தக்கண்ணீர் சுரக்கிறது. அதே வேளையில் அவன் உடலெங்குமுள்ள உரோமங்கள் சிலிர்க்கின்றன. காமத்துக்கும், காசு ஆசைக்கும் அவன் முற்றிலும் அப்பாற்பட்டவன். அத்தகையவனே தெய்வ சாட்சாத்காரம் அடையப்பெற்றவன் எனக் கருதப்படுகிறான். தீக்குச்சிகள் முற்றிலும் உலர்ந்தவைகளாக இருக்குமாகில் ஒரு தடவை இலேசாக உறைக்கின்றபொழுதே அவைகள் தீப்பற்றிக் கொள்கின்றன. ஆனால் அக்குச்சிகள் நனைந்திருந்தால் ஒன்றன்பின் ஒன்றாக அவைகளை உறைத்துக்கொண்டே போனாலும் அவைகள் தீப்பிடிக்க மாட்டா. ஆதலால் நனைந்துபோன தீக்குச்சிகளை உறைப்பது வீண் நஷ்டம். அதே பாங்கில் காமத்திலும் காசு ஆசையிலும் மூழ்கிக் கிடக்கின்ற மானுடனொருவனுடைய உள்ளத்தில் தெய்விக உணர்ச்சியைக் கிளப்புவதற்குச் சாத்தியப்படாது. அன்னவனைத் தெய்விகத்தில் தட்டி எழுப்ப ஆயிரம் தடவை முயற்சி பண்ணலாம். ஆனால் அம்முயற்சிகள் யாவும் ஒன்றுக்கும் உதவமாட்டா. நனைந்துபோன தீக்குச்சி பிறகு உலர்ந்து போகுமாகில் ஒரு தட்டுத் தட்டும்பொழுதே அது தீப்பிடிக்கிறது. அதே போன்று உலக ஆசைகளினின்று விடுபட்டுள்ள மானுடனொருவன் உள்ளத்தில் தெய்விக உணர்ச்சியை மிக எளிதில் கிளப்பிவிடலாம்.''

திரைலோக்கியர்: ''உலக ஆசைகளில் ஊறிக்கிடக்கின்ற மானுடனொருவனுடைய உள்ளத்தை உலர்ந்துபோய்ப் பக்குவமாகும்படி செய்வது எப்படி?''

பரமஹம்சதேவர்: ''அருள்தாகம் பிடித்தவனாக மானுடனொருவன் அன்னை பராசக்தியிடம் பரிந்து பிரார்த்தனை பண்ணவேண்டும். அவளுடைய அனுக்ரஹத்தால் உலக ஆசைகளில் நனைந்து கிடக்கும் மானுடனொருவனுடைய உள்ளம் விரைவில் உலர்ந்து போகிறது. உலக நாட்டம் தானாகத் தணிகிறது. போகம் பொருள் பற்றிய அற்ப ஆசைகளெல்லாம் அறவே அகலப்பெறுகின்றன. மானுடனொருவன் அன்னை பராசக்தியைத் தன் சொந்தத் தாயாக நினைப்பானாகில் அவனுடைய உலக ஆசைகள் விரைவில் உலர்ந்து போகின்றன. அன்னை பராசக்தியைச் செவிலித்தாயாகக் கருதலாகாது. சொந்தத் தாயாகவே கருதவேண்டும். அருள் வேட்கை மிக மேலோங்கப் பெற்றவனாக இருந்துகொண்டு அன்னையினிடம் போராடிப் பிரார்த்தனைபண்ணவேண்டும். குழந்தையொன்று தன் தாயினுடைய முந்தானையைப் பற்றிப் பிடித்துக்கொண்டு காற்றாடி ஒன்றை விலைக்கு வாங்குவதற்குப் பத்துப் பைசா வேண்டுமென்று அது அழுது கேட்கிறது. அப்படி அது கேட்கிற வேளையில் அதன் தாய் தன் தோழிமார்களோடு அரட்டையடித்துக்கொண்டு இருக்கலாம். குழந்தையைக் கவனிக்க அப்பொழுது அவளுக்கு அவகாசமில்லை. 'உனக்கு ஒரு தம்பிடி தரமாட்டேன். உன் கையில் காசு எதையும் தரவேண்டாமென்று உன் அப்பா என்னிடம் சொல்லியிருக்கிறார். உனக்குக் காசுதருவதை அவர் ஆட்சேபிப்பார். காற்றாடி வைத்துக்கொண்டு விளையாடினால் உனக்குத் தொந்தரவுகள் பல உண்டாகும்' என்று அவள் தடை பண்ணுகிறாள். ஆயினும் அச்சிறுவன் தன் கோரிக்கையைப் பலப்படுத்திக்கொண்டே போகிறான். 'கோ' வென்று கதறியழ அவன் ஆரம்பிக்கின்றான். அவனுடைய அழுகையைப் பார்த்துத் தாயினுடைய உள்ளம் கரைகிறது. தோழிமார்களிடம் அவள் 'சற்றுப் பொறுங்கள். இச்சிறுவனுடைய தேவையை நான் நிறைவேற்றி வைத்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போகிறாள். பணப் பெட்டியை அவள் திறக்கிறாள். 'க்ளிக்' என்று அது திறந்து கொள்கிறது. பத்துப்பைசாவை எடுத்து அந்தப் பையனிடம் கொடுக்கிறாள்.

''பக்தனொருவன் அதேவிதத்தில் அன்னை பராசக்தியோடு போராடவேண்டும். அன்னையினிடம் கதறிப்பதறி அழத் தெரிந்தவனுக்கு அவளுடைய அருள் நிச்சயமாகக் கிடைக்கும்.''

''பக்தனுடைய வல்லமை முழுதும் அவன் படைத்துள்ள அருள்தாகத்திலிருக்கிறது. பிரிந்திருக்கிற இரும்புத்துண்டுகள் இரண்டைக் காந்த சக்தி இணைத்து வைப்பது போன்று ஆழ்ந்த அருள்நாட்டம் இறைவனையும் பக்தனையும் இணைத்து வைக்கிறது. ஆதலால் அன்னையின் அருளைப் பெறுவதற்கு உபாயம் அது வேண்டுமென்று நொந்து வருந்துதலாம்.''

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

341. கற்பனையாப் பாடுகின்றேன்
கண்ணீரும் கம்பலையுஞ்
சொப்பனத்துங் காணேனென்
சொல்வேன் பராபரமே.

உள்ளத்தினுள்ளே உணர்வை ஓங்குவிப்பதற்கு உற்ற கருவியாயிருப்பது இசை. அமைதியை உண்டுபண்ண வல்லது இசை. ஆனந்தத்தைப் பெருக்க வல்லது இசை. உயிர்வகைகளுள் ஒற்றுமையை ஓங்குவிப்பது இசை. ஜீவபோதத்தையும் தாண்டிப் பக்தனை அதீதத்துக்கு எடுத்துச் செல்லுவது இசை. இத்தகைய இசைக்கு உறுப்புக்களாயிருப்பவை தாளம், ராகம். பாட்டுக்கேற்ற தாளம் உண்டு. உணர்ச்சிக்கேற்ற ராகம் உண்டு. இவை யாவும் ஒன்று கூடி அமையுமானால் பக்திக்குப் புறம்பாயிருக்கும் உள்ளத்திலும் பக்தி உருவெடுக்க ஆரம்பிக்கும். ஆனால் இத்தகைய இசையை உணர்ச்சிக்குப் புறம்பாக்கி வெறும் ஓசையாகச் செய்து விடுவதும் சாத்தியம். ஒலியைக் கிளப்புகிற எந்திரத்தில் ஒலித்தத்துவங்களையெல்லாம் அமைக்கலாம். ஆனால் உணர்ச்சியை அதனிடம் அமைக்க முடியாது. வெறும் இசையிலேயே பயிற்சி பெற்றிருக்கின்ற மானுடனொருவன் எந்திரம் போன்று பாட்டைப் பாட வல்லவனாகிறான். அவன் பாடுகின்ற பாடலுக்கு உயிரூட்டுகிற உணர்ச்சியில்லாவிட்டால் அது வெறும் கற்பனைப் பாட்டு ஆகிறது. வேண்டியவாறு அதில் அலங்காரம் அமைந்திருக்கலாம். அப்படியிருந்தும் அது பக்தியை வளர்க்காது. பக்தியோடு கூடிய பாடலோ உள்ளத்தை உருக்குகிறது. கண்ணீர் ததும்பிக்கொண்டு வரும்படி செய்கிறது. உடலை அது நடுநடுங்கச் செய்கிறது. இதுவே பக்தி பூர்வமாகப் பாடுகின்ற பாடலுக்கும், இசைத் திறமையைப் பகட்டாகக் காட்டுவதற்காகப் பாடுகின்ற பாடலுக்கும் உள்ள வித்தியாசமாம். வெறும் இசை ஞானம் படைத்திருக்கின்றவன் கற்பனையாகப் பாடுகின்றான். பக்தன் ஒருவனே உணர்ச்சியின் வேகத்தால் பாடுகின்றான். உணர்ச்சியின் வேகத்தால் பாடுகின்ற பான்மையை நான் கனவிலும் கண்டறியேன். வெறுமனே உயிர் வாழும் எந்திரமாக இருக்கின்றேன். ஆண்டு ஆண்டுகளாக இசையை நாம் கிளப்பிக் கொண்டேயிருக்கலாம். காற்று அடிக்கிற இடத்தில் வைக்கப்பட்டிருக்கும் மூங்கில் குழாய் ஓசையைக் கிளப்புகிறது. அல்லும் பகலும் அது ஓசையைக் கிளப்பிக்கொண்டிருந்தாலும் வெறும் ஜடப்பொருளாகவே இருக்கிறது. அத்தகைய பரிதாபகரமான நிலையில் நான் இருக்கிறேன். இறைவா, உள்ளக்கசிவால் கண்ணீரை ஏராளமாகக் கொட்டிக் கொண்டு உடலில் உணர்ச்சி ததும்புகிற நடுக்கத்தை உண்டு பண்ணிக்கொண்டு உன்னைக் குறித்து நான் எப்போது போற்றிப் பாடுவேன் என்பது இக்கண்ணியின் கருத்தாகும்.

342. வன்பொன்று நீங்கா
மனதிறப்ப மாருப்பேர்
அன்பொன்றும் போதும்எனக்
கையா பராபரமே.

வன்பு – கடினத்தன்மை; மனது இறத்தல்– மனோநாசம் ஆதல்.

ஒன்றோடொன்று முரண்படுகின்ற இரண்டு வித இயல்புகள் மனதினிடத்தில் உண்டு. வைரம் போன்று கடினமாயிருப்பது ஓர் இயல்பு. வெண்ணெய் போன்று உருகும் பாங்குடையது மற்றொன்று. வைரம் போன்று கல் நெஞ்சம் படைத்திருப்பது அரக்க இயல்பு. அன்பின் மேலீட்டால் உருகும் பாங்குடையது தெய்விகப் பெற்றி பெற்றுள்ளது. தெய்விகப் பெற்றியே ஆத்ம சாதனத்துக்கு இன்றியமையாத பேறு ஆகிறது. கல் நெஞ்சம் ஆத்ம சாதனத்துக்கு உதவாது. குழையும் பாங்குடைய நெஞ்சமே ஆத்ம சாதனத்துக்குப் பொருத்தமானது. இப் பிரபஞ்சம் வாழ்க்கைப் பயிற்சி தருவதற்கு ஏற்ற கூடமாக அமைந்திருக்கிறது. பயிற்சி பெறுபவர்களுள் அரக்கத்தன்மையை வளர்ப்பவர்கள் வன்னெஞ்சக் காரர்களாகவே வளர்ந்து வருகிறார்கள். யாருக்கோ எதற்கோ இரக்கம் காட்டும் பான்மை வன்னெஞ்சத்தில் இல்லை. மற்று தெய்வப் பெற்றியை உடைத்திருக்கும் மனது

எதையும் வெறுப்பதில்லை. அனைத்திடத்தும் அன்பைப் பெருக்குகிறது. அன்புக்கடலிலேயே அது கரைந்துபட்டுப்போகிறது. அத்தகைய மேலான அன்பில் ஊறி என் உள்ளம் ஒடுங்கிப் போகும்படி இறைவா, நீ அருள் புரிவாயாக என்பது இக்கண்ணியின் கருத்து.

343. ஏதுந் தெரியா எளியேனை
வாவென நின்
போதநிலை காட்டிற்
பொறுதோ பராபரமே.

ஏதுந் தெரியாதிருத்தல் - கல்வியும் கேள்வியும் இல்லாத மடைமை நிலை; போதநிலை - ஆத்மீகப் பேருணர்வு; பொறுதோ - தாங்க முடியாதோ.

பக்தி சாதனத்தில் சிறப்பு ஒன்று உண்டு. கல்வியும் கேள்வியும் அதற்குத் தேவையில்லை. குழந்தை ஒன்றின் சரள சுபாவமே அதற்குப் போதுமானது. ஆதலால் கற்றவர்கள் கல்லாதவர்கள் ஆகிய எல்லார்க்கும் பக்தி சாதனம் பொது உடைமை ஆகிறது. பக்தி வாய்க்கப் பெற்றிருக்கிறவன் பரம பாக்கியவான் ஆகிறான். பக்தியின் எளிய பாங்கை உலகுக்கு எடுத்து விளக்குதல் பொருட்டே அதைக் கண்ணன் கோபிமார்களிடத்து ஊட்டி வந்தான். அத்தகைய ஆயர்பாடிச் சிறுமிகள் தூய உள்ளம் படைத்திருந்தார்கள். வேறு சிறப்பு ஏதும் அவர்களிடத்து இல்லை. ஆயினும் நாள் ஏற ஏற அவர்கள் உள்ளத்தில் பேரன்பு அளவுகடந்துப் பெருகி வந்தது. அன்பின் வேகத்தால் அவர்களுடைய அமைப்பு முழுதும் கண்ணனுக்குரியவைகள் ஆகிவிட்டன. அந்தக் கோபிமார்களுள் ஒருத்தியின் பெயர் ராதை. அவள் வயதில் மூத்தவள். அவளிடத்தில் பேரன்பு புயல் காற்றுப் போன்று பெருகிற்று. புயல் காற்று அடித்தால் மரம் செடி கொடிகளை எல்லாம் அது அல்லோல கல்லோலப்படுத்துகிறது. ஆனால் மலை ஒன்றை எப்புயலும் அசைப்பதில்லை. பேரன்புக்கு எதையும் அசைத்துத் தள்ளுகிற சிறப்பு உண்டு. அத்தகைய பேரன்பை அல்லது பராபக்தியை ஆத்ம சாதகன் வளர்க்கவேண்டும். அப்படி வளர்ப்பதற்கிடையில் ஸ்ரீமதி ராதை படைத்திருந்த உறுதிப்பாட்டையும் தெய்விகப் பண்பையும் பெறுதல் வேண்டும். தெய்விகப் பண்பின் விளைவாக அம்மாதரசி படைத்திருந்த பஞ்சேந்திரியங்களிடத்தும் தெய்விகப்பெற்றியே பொலிவதாயிற்று. பார்ப்பதற்கென்றே உரிய கண்ணானது ஓசையைக் கேட்கவும் வல்லதாயிற்று. கேட்பதற்கே உரிய காதானது தெய்வ வடிவத்தைக் காண்பதற்கான பண்பையும் பெற்றது. அத்தகைய பண்பைப் பெறுவதற்கு உள்ளம் கனல் நெய் போன்று உருகவும், கற்பாறை போன்று அசையாதிருக்கவும் வல்லதாக வேண்டும். பராபக்தியில் முரண்பாடுகளனைத்தும் இணைந்து ஒன்று கூடுகின்றன. அதன் வேகத்தைத் தாங்குதற்கான உறுதிப்பாடும் பக்தனிடத்து இருக்கவேண்டும். அத்தகைய பெருநிலையை இறைவா, எனக்குத் தந்தருள்வாயாக என்பது இக்கண்ணியின் கருத்து.

---

## அட்டைப் பட விளக்கம்

மஹாபாரதப் பெரும்போரில் பத்தாம் நாள் அன்று பீஷ்மர் அர்ஜுனனால் தோற்கடிக்கப்பட்டார். ஆனால் அவர் இச்சாம்ருத்யு வரம் பெற்றவர். அதாவது அவர் அனுமதிக்காது மரணம் அவரை அணுகாது. உத்தராயண புண்ணிய காலமாகிய தை மாதத்தை எதிர்பார்த்து அவர் அம்புப்படுக்கையில் யோக நிஷ்டையில் இருந்தார்.

பெரும் போரில் பாண்டவர்கள் வெற்றியடைந்தார்கள். ஆனால் யுதிஷ்டிரன் நாடு ஆள விரும்பவில்லை. அவனுக்குத் தர்மோபதேசம் பண்ணும்படி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பாண்டவர்கள் ஐவரையும் பீஷ்மரிடம் அழைத்துச் சென்றார். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அருளால் பீஷ்மர் மீது பாய்ந்திருந்த அம்புகள் அனைத்தும் வீழ்ந்து விட்டன. அவருக்கு யோக பலம் வந்தது. எழுந்து உட்கார்ந்து பாண்டவர்களுக்கு ராஜ தர்மத்தைப் புகட்டினார். அது இப்படத்தில் அடங்கியிருக்கிறது.

---

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

தியானப் பயிற்சி மிகவும் அவசியமானது. இஷ்ட தெய்வத்தைக் குறித்து நாள்தோறும் தியானம் பண்ணி ஆகவேண்டும். மனம் சஞ்சலம் உடையது. மனதில் உள்ள சஞ்சலத்தைப் போக்குவதற்கு முதலில் ஜபம் செய்ய வேண்டும். சக்தி வாய்ந்த மந்திரத்தை ஜபித்தால் மனதில் சஞ்சலம் நீங்கும். தேங்கிய தெளிந்த நீர் உடைய தடாகத்தில் தரை தென்படுவது போன்று அசையாத தூய உள்ளத்தில் ஆத்ம சொருபம் உணரப்படுகிறது. ஆத்ம ஞானம் பெறுவது ஒரு நாளில் ஆகும் காரியம் அன்று.

இடைவிடாது சாதனையைச் செய்து வர வேண்டும். பிராம்ம முகூர்த்தம் என்று சொல்லப்படும் அதிகாலை நேரம், நண்பகல், மாலை வேளை, நள்ளிரவு ஆகிய சந்தியா வேளைகள் தியானத்திற்கு ஏற்ற வேளைகள் ஆகும். அதிகாலை நேரம் மிகவும் பொருத்தமானது. தியானத்திற்கு முன்பு ஞான நூல்களை வாசிப்பது நல்லது. ஞான நூல்களில் உள்ள கருத்துக்களை ஆழ்ந்து சிந்தனை செய்தால் மனம் தியானத்திற்குத் தயாராகும். தியானத்துக்குப் பின் அமைதியுற்றிருப்பது அவசியம். அப்பொழுது தான் தியானத்தினுடைய பலன் கிட்டும். தியானத்துக்குப் பின்பு மனம் சாந்தியுற்றிருக்கும். அப்பொழுது மனதில் ஆத்மீக அனுபவம் உண்டாகும். ஆகையால் தியானத்துக்குப் பின் உலக எண்ணங்களில் மனதைச் செலுத்தக் கூடாது; உலகக் காரியங்களிலும் உடனே ஈடுபடக்கூடாது.

ஆரம்ப நிலையில் உனக்குத் தியானம் செய்ய விருப்பம் ஏற்படாமல் இருக்கலாம். குறிப்பிட்ட நேரம் தியானத்தில் அமர்வதைப் பழக்கமாகக் கொள்வது நல்ல ஆத்ம சாதனையாகும். இயந்திரம் போன்று முதலில் ஆத்ம சாதனை செய்து வந்தால் அத்தகைய ஆத்ம சாதனைக்கும் பலன் உண்டு. இரண்டுமணி நேரமாவது ஒரு நாளைக்கு ஜபம் செய்ய வேண்டும். இயற்கை அழகு நிறைந்த தனிமை இடம் சாதனைக்கு ஏற்ற இடமாகும். இயற்கை அழகை மனம் நன்கு ரசிக்கலாம். இயற்கை அழகில் மனம் ஈடுபட்டால் மனதிற்குச் சாந்தி உண்டாகும்.

தியானத்தின் பொழுது பல தெய்வங்களின் வடிவங்கள் உன் காட்சிக்கு வரலாம். அப்படி வருவது பண்பாட்டுக்கு அறிகுறியாகும். உன் இஷ்ட தெய்வமே அத்தனை வடிவங்களில் காட்சிதருகிறார் என்று நீ கருதுதல் வேண்டும். அவர் ஏகப் பொருளாகவும், அநேகப் பொருள்களாகவும் இருக்கின்றார். எந்த வடிவத்தில் அவர் தோன்றி வந்தாலும் அதனை நீ ரசிக்கக் கற்றுக்கொள். அத்தனை வடிவங்களும் உன் இஷ்ட தெய்வத்தில் லயமாகி விடுவதைக் காண்பாய். சந்தியா வேளைகள் சாதனைக்கு அனுகூலமாக அமைந்திருக்கின்றன. அங்ஙனமே அமாவாசை, பௌர்ணமி, ஏகாதசி ஆகிய நாட்கள் சாதனைக்கு மிகவும் அனுகூலமான நாட்கள் ஆகும். அந்த நாட்களில் ஜபம், தியானம் செய்வதை அதிகப்படுத்து.

உனக்கு குரு அமைந்திருப்பாரானல் தியானத்திற்கு முன் குருவைத் தியானம் செய். குருவும், கடவுளும் ஒன்றென அறி. உன் குருவினுடைய வடிவம் இஷ்ட தெய்வத்தினுடைய வடிவத்தில் மறைந்துபோய் இஷ்ட தெய்வத்தின் காட்சியைப் பெறுவாய். ஜபம், தியானம் முறையாகச் செய்து வரும்பொழுது தான் சாதனையில் முன்னேற்றம் காணமுடியும்.

துறவு ஓர் உயர்ந்த நிலை. துறவு பெறுவது மனபரிபாகத்தைப் பொறுத்திருக்கிறது. மன பரிபாகம் முறையாகக் கருமம் செய்வதன் மூலமாக வந்து அமைகிறது. நோய்வாய்ப் பெற்றுள்ள பெற்றோர்களை நன்கு பாதுகாக்க வேண்டும். பெற்றோர்களுக்குப் பணிவிடை பண்ணுவதில் நீ சிரத்தையோடு ஈடுபடவேண்டும். பெற்றோர்களை நீ வேண்டும் என்றே புறக்கணிக்கக் கூடாது. பெற்றோர்களுக்குப் பணிவிடை பண்ணுவதன் மூலமாக நீ மேல் நிலையை அடையலாம். வியாதனுடைய கதை அதை நன்கு விளக்குகிறது.

சுயநலத்திற்குச் சிறிதும் இடமில்லை. சுயநலக்காரனுக்கு முன்னேற்றம் இல்லை. சுயநலக்காரன் சமயத்தை அனுஷ்டித்தவன் ஆகமாட்

டான். சுவாமி விவேகானந்தர் தம்முடைய சகோதர சிஷ்யர்களுக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளதாவது, "சகோதரர்களே! நீங்கள் உங்களுடைய வாழ்க்கையைப் பிறர் நலத்துக்காகப் பயன்படுத்துங்கள். மற்றவர்கள் இன்பமடைவதை உங்களுடைய இன்பமாகக் கருதுங்கள். உங்களுக்காக நீங்கள் எது செய்தாலும் அது சமய சாதனை ஆகாது. மற்றவர்களுக்காகச் செய்யும் பணிவிடையும் மற்றவர்கள் இன்பத்தில் நீங்கள் இன்பம் அடைவதுமே சமய சாதனை என்பதை அறிந்து கொள்ளுங்கள்." இது எவ்வளவு உயர்ந்த கருத்து என்பதை எண்ணிப்பார். இக்கருத்து உன் உள்ளத்தில் ஆழ்ந்து பதியவேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ண மடம் சமூகசேவை செய்து வருகிறது. மக்கள் சேவையை மகேசுவரனுக்கு உரிய சேவையாகச் செய்து வந்தால் ஆத்மசாதனையில் முன்னேற்றம் அடையலாம் என்பதை ஸ்ரீராமகிருஷ்ண மடம் காட்டித்தருகிறது. மக்களுக்கு ஏராளமான பணிவிடை செய்வதற்கிடையில் ஜபம், தியானம் செய்வதை நிறுத்திவிடாது நாள்தோறும் முறையாகச் செய்துவரவேண்டும். மக்கள் சேவையும், ஜபம், தியானம் செய்யும் பயிற்சியும் சேர்ந்தே நிகழவேண்டும். ஜபம், தியானம் முறையாகச் செய்தால்தான் நீ கர்மம் செய்யும்பொழுதும் உன் உள்ளத்தில் ஈசுவர சிந்தனையை வரவழைக்க முடியும். கர்மத்தைத் துவங்கும் பொழுது ஈசுவர சிந்தையோடு துவங்கு. கர்மத்தை முடிக்கும்பொழுது ஈசுவர சிந்தனையோடு முடி. கர்மம் செய்துகொண்டு இருக்கும்பொழுது இடையிடையே ஈசுவர சிந்தனையை வரவழைத்துக்கொள். இங்ஙனம் கர்மம் செய்துகொண்டே வந்தால் கர்மத்தில் ஈடுபட்டுக்கொண்டிருப்பதற்கிடையில் உன் மனம் ஈசுவரனை நோக்கிச் செல்லும். மனம் பரிபாகம் அடைகிறபொழுது பெரும்பகுதி மனம் ஈசுவர சிந்தனையில் ஈடுபட்டிருக்க, சிறு பகுதி மனதைக்கொண்டு திறம்படச் செயல் புரிந்துவிடலாம். மனம் எவ்வளவுக்கெவ்வளவு ஈசுவர சிந்தனை செய்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அதற்கு ஆற்றல் அதிகரிக்கிறது. கர்மம் செய்வதற்கிடையில் கர்மத்தைச் செய்தேன் என்ற எண்ணம் ஈசுவர சிந்தனை செய்கின்ற மனதில் எழுவதில்லை.

"கர்மத்தை வழிபாடாகச் செய்" என்று சுவாமி விவேகானந்தர் அடிக்கடி பகர்வதுண்டு. தியானம் செய்வது மேலானது எனினும் இரவும், பகலும் எப்பொழுதும் தியானத்தில் மூழ்கியிருப்பது ஆரம்ப ஆத்ம சாதகர்களுக்கு இயலாது. ஆகையால் மக்களின் நலம் கருதிப் பற்றற்றுக் கர்மம் செய்யவேண்டும். பற்றற்றுக் கர்மம் செய்கின்ற அளவு சித்த சுத்தி உண்டாகிறது. கர்மம் செய்யாமல் இருப்பாயானால் கெட்ட எண்ணங்களும், கவலைகளும் உன் உள்ளத்தில் இடம் பெற்றுவிடும். மனதைத் தூய சிந்தனையில் ஈடுபடுத்தாவிட்டால் தேவையில்லாத எண்ணங்களில் மனம் செல்ல ஆரம்பித்துவிடும். செயல்களுக்கிடையில் சிறந்த வழிபாடு நிகழவேண்டும் என்று கீதை வற்புறுத்துகிறது. நிஷ்காமிய கர்மம் செய்கின்ற அளவு தியானம் நன்கு கைகூடுகின்றது. கர்மமும், வழிபாடும் சேர்ந்து அமைவதுதான் சாதனையில் முன்னேறுவதற்கு அனுகூலமாக இருக்கும். நன்கு தியானம் பண்ணுகின்றவன் திறம்படச் செயல்புரிய முடியும். பற்றற்றுத் திறமையோடு செயல் புரிகின்றவன் ஆழ்ந்து தியானம் செய்கின்றான். எனவே தியானமும் நிகழவேண்டும், சிறந்த செயலும் நிகழவேண்டும். சிலர் கர்மத்தையே முக்கியமாக வைத்துக்கொண்டு ஜபம், தியானத்தை ஒதுக்கி வைப்பார்கள். கர்மம் ஜபம், தியானத்தை வளர்ப்பதற்கு அனுசரணையாக இருக்கவேண்டும் என்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். கர்மத்தில் கட்டுண்டு கிடப்பது உன்னுடைய இலட்சியமாக இருக்கக்கூடாது. கர்மம் செய்து, கர்மத்திலிருந்து விடுபடுவது உன் இலட்சியமாக இருக்கவேண்டும். ஜபம் செய்வதும், தியானம் செய்வதும் சூட்சும கர்மங்கள் ஆகின்றன. காயத்தைக் கொண்டு செய்கின்ற ஸ்தூல கர்மங்களை நன்கு செய்வதன் மூலம் மனம் பரிபாகம் அடைகிறது. பரிபாகம் அடைந்த மனது ஜபம், தியானத்தில் ஈடுபடும்பொழுது அது மேலும் பரிபாகம் அடைந்து ஆத்ம சொருபத்தைக் கிரஹிக்க வல்லதாகிறது. உள்ளத்தை ஈசனிடம் ஒப்படைக்கின்றவர்கள் உண்மையில் பாக்கியவான்கள்.

---

# முழுமுதற்பொருள்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு விருதுநகர் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ *14*ஆம் பக்கத் தொடர்ச்சி ]

பரசுராமனிடமிருந்து விஷ்ணுதனுசை வாங்கியதும் ராமன் விளையாட்டுப்போன்று அதில் நாண் ஏற்றிவிட்டான். விஷ்ணு தனுசு ராமனுக்குரியது. அதைத் தொட்டு நாணேற்றியவுடன் தசரதராமனுக்குத் தான் அவதரித்து வந்த நோக்கம் ஞாபகத்திற்கு வந்துவிட்டது. பரசுராமனைப் பார்த்து ராமன் பகர்ந்ததாவது: "பெரியோய்! தங்கள் உத்தரவுப்படி நாணேற்றியாகிவிட்டது. இதோ அம்பைத் தொடுக்கின்றேன். அது ஒரு நாளும் வீண் போகாது. அதற்கு இலக்கு எது? தாங்கள் பகர்ந்தருள்வீர்களாக." ராமனுடைய கூற்றில் நமக்கொரு செய்தியிருக்கிறது. ராமபாணம் ஒருநாளும் வீண்போகாதென்பதில், பக்தர்களுடைய நல்ல சங்கல்பம் ஒருநாளும் வீண் போகாதென்பது வெளியாகிறது. ராமன் தொடுத்த அம்புக்குப் பரசுராமனிடம் இலக்குக் கேட்டபொழுது ராமன் யார் என்பது பரசுராமனுக்கு விளங்கிவிட்டது. இதுவரையிலும் ராமனை ஒருமையில் விளித்த பரசுராமன் இப்பொழுது பன்மையில் ராமனோடு பேசுகிறார். "தாம் யார் என்பதை இப்பொழுது அறிகின்றேன். என்னுடைய ஆணவ அகங்காரத்தின் மீது உம்முடைய பாணத்தைச் செலுத்துவீராக." இங்ஙனம் பரசுராமன் பகர்ந்ததும் தசரதராமன்மானசீகமாகப்பரசுராமனின் அகங்காரத்தின்மீது பாணத்தைச் செலுத்தினார். பரசுராமன் தசரதராமனின் பாதத்தைத் தொட்டு வணங்கினார். சிறியோரெல்லாம் சிறியரும் அல்லர் என்ற கோட்பாட்டின்படி தசரதராமன் வயதில் சிறியவனாக இருந்தாலும் நாராயண மூர்த்தியின் பூரண அவதாரமாகையால் அவர் பெரியவராகின்றார். பரசுராமன் நாராயண அம்சத்தில் ஒரு சிறு அம்சமாகையால் பூரண அம்சமாகிய ராமனை வணங்கினார். தசரதராமன் பணிவோடு அதை ஏற்றுக்கொண்டார். வயதில் சிறியவராக இருந்த ராமன் வயதில் முதியவராக இருந்தபரசுராமனைத்திருத்தி அமைத்துவிட்டார். "இனி மேற்கொண்டு நான் செய்யக்கிடப்பது யாது?" என்று பரசுராமன் கேட்டார். "தாங்கள் இப்பொழுதே இமாலயம் சென்று கடும் தவம் புரிந்து எஞ்சியுள்ள ஆணவ அகங்காரத்தைத் துடைத்துவிட்டுப் பரத்தில் ஒன்றுபடுவீர்களாக" என்றார் ராமன். பரசுராமன் சிரம் தாழ்த்தி வணங்கிவிட்டுத் தவத்திற்குப் போனார். பணிவோடு இருப்பவர்களுக்கு ஒருநாளும் நஷ்டமில்லை. வீண் கர்வத்தால் அடையப்போவது ஒன்றுமில்லை. எல்லார்க்கும் நாம் மரியாதை காட்டுகிற பொழுது நாம் மரியாதைக்குரியவர்களாகின்றோம். இப் பாடத்தைப் பரசுராமனிடம் ராமன் நடந்துகொண்ட விதம் புகட்டுகின்றது. ராமனோடு தொடர்பு வைத்தவர்களெல்லாம் அடைந்த பெருநிலை பரத்தில் ஒன்றுபட்ட பெருநிலையாகும். அறிவில் முதிர்ந்தவர்களிடமும், சான்றோர்களிடமும் தொடர்பு வைக்கின்ற வாய்ப்பு பண்பட்டவர்களுக்குக் கிடைத்தால் அது நல்ல வாய்ப்பு ஆகிறது. அவ்வாய்ப்பின் மூலம் அவர்கள் பெருநிலையை அடைகின்றார்கள்.

மிதிலையிலிருந்து ராமன் அயோத்திக்கு வந்தபின் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்யத் தசரதன் ஏற்பாடு செய்கின்றார். கூனியால் மனம் மாறுபட்ட கைகேயி தசரதனிடம் இரண்டு வரங்கள் கேட்கின்றாள். அவற்றைக் கொடுக்க மனமில்லாத தசரதன் மூர்ச்சையடைந்து விழுந்துவிடுகின்றார். கைகேயி ராமனை அழைத்து, "உன் தந்தையார் எனக்கு இரண்டுவரங்கள் தருவதாக வாக்குக் கொடுத்திருக்கின்றார். அவர் அதை உன்னிடம் சொல்லத் தயங்குவதால் நானே உன்னிடம் பகர்கின்றேன். பதினான்கு ஆண்டுகள் நீ தண்டகாரண்யம் செல்லவேண்டுமென்பது ஒரு வரமாகும். உனக்காக ஆயத்தப்படுத்தியவைகளைக்கொண்டு பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்து பதினான்கு ஆண்டுகள் அவன் நாடாளவேண்டுமென்பது மற்றொரு வரமாகும்" என்று கூறினாள். "தாயே, இதில் என்ன சிரமம் இருக்கின்றது? தந்தை இதைச் சொல்லுவதற்குத் தயங்குவானேன்? தாய் தந்தைய

ருடைய சொற்படி நடப்பது மைந்தனுடைய கடமையல்லவா? நீங்கள் என்ன உத்தரவிட்டாலும் அதற்குக் கீழ்ப்படிய நான் கடமைப்பட்டிருக்கின்றேன். நான் ஒருநாளும் தாய் தந்தையரை மீறி நடக்கமாட்டேன்'' என்று ராமன் கூறினர். தன் வரங்களை நிறைவேற்றிக்கொள்வதில் சிரமம் இருக்குமென்று எண்ணியிருந்தாள் கைகேயி. ஆனல் ராமன் அதை மிகவும் எளிதாக்கிவிட்டார். கைகேயியின் வரத்தின்படி ராமன் வனவாசம் போகும்பொழுது அவருடன் சீதையும், லட்சுமணனும் சென்ருர்கள்.

வனவாசத்தின் பொழுது ராவணன் சீதையைத் திருடிக்கொண்டு போய்விட்டான். ராமனும், லட்சுமணனும் சீதையைத் தேடிக் கொண்டு தென்திசை வந்தார்கள். மதங்க மஹரிஷியின் ஆச்ரமத்தின் எல்லைப்புறத்திற்கு வந்தபோது ஓர் அற்புத நிகழ்ச்சி நிகழ்ந்தது. முன்பு மதங்க மஹரிஷியின் ஆச்ரமமாக இருந்த இடத்தில் இன்று ஐயப்பன் கோவில் இருக்கிறது. அந்த இடத்தில் ஓர் உயிர் மற்ருேர் உயிருக்குத் தீங்கு செய்ய முடியாது. வாலியினல் துரத்தியடிக்கப்பட்ட சுக்ரீவன் நான்கு மந்திரிகளோடு அந்த இடத்தில் அடைக்கலம் புகுந்திருந்தான். ராமன் அந்த இடத்துக்கு வந்தபொழுது சுக்ரீவனும், மூன்று மந்திரிகளும் பயந்து ஓடினர்கள். ஆஞ்சநேயன் அவர்களைத் தடுத்து நிறுத்தப் பார்த்தான். "வாலியின் சூழ்ச்சியால் அவர்கள் நம்மை நோக்கி வருகின்றனர்'' என்று கூறிச் சுக்ரீவன் மூன்று மந்திரிகளுடன் ஓடிவிட்டான். மஹாவீரனை ஆஞ்சநேயன் ராமலட்சுமணர்கள் வருவதைப் பார்த்துக்கொண்டு நின்ருன். ராமனும், லட்சுமணனும் ஆஞ்சநேயனுக்குப் பக்கத்தில் வந்தார்கள். ஆஞ்சநேயன் அவர்களைப் பார்த்து, "நீங்கள் இருவரும் யார்? உங்களிடத்தில் சில முரண்பாடுகளைக் காண்கின்றேன். நீங்கள் யாரென்பதை என்னிடத்தில் உள்ளபடி சொல்லிவிடுங்கள்'' என்று கேட்டான். "எங்களிடத்தில் என்ன முரண்பாட்டைக் காண்கின்ருய்?'' என்று லட்சுமணன் கேட்டான். "உங்களைப் பார்த்தால் தேவர்களைப் போன்று தென்படுகிறீர்கள். தேவர்களுடைய பாதங்கள் பூமியில் படா. ஆனல் உங்களுடைய பாதங்கள் பூமியில் படுகின்றன. ஆகையால் நீங்கள் தேவர்கள் அல்லர். நீங்கள் தபஸ்விகள் போன்று தென்படுகின்றீர்கள். ஆனல் உங்கள் கைகளில் கொடிய ஆயுதங்கள் வைத்திருக்கிறீர்கள். தபஸ்விகள் அத்தகைய ஆயுதங்கள் வைத்திருக்கமாட்டார்கள். நீங்கள் ஞானிகள் போன்று தென்படுகின்றீர்கள். ஆனல் உங்கள் முகத்தில் வியாகூலம் தென்படுகிறது. ஞானிகளோ விசனப்படமாட்டார்கள்'' என்று ஆஞ்சநேயன் கூறினன். ஆஞ்சநேயன் கூறியதைக் கேட்ட ராமன், "லட்சுமணு, நம் முன் நிற்கும் இவன் கற்றவன். இவனிடம் நட்புக்கொண்டால் இவன் நமக்கு நன்கு பயன்படுவான்'' என்று கூறி ஆஞ்சநேயனுடைய நட்பைப் பெற்ருர். ராமலட்சுமணர்களைச் சுக்ரீவனிடம் அழைத்துச்சென்று சுக்ரீவனுக்கும் அவர்கள் இருவருக்கும் ஆஞ்சநேயன் இணக்கத்தை உண்டுபண்ணினன். மனைவிகளை இழந்திருந்த ராமனும், சுக்ரீவனும் பரஸ்பரம் உதவிபண்ணிக்கொள்ளத் தீர்மானித்தார்கள். இருவர்களும் அக்னி சாட்சியாக நட்புப் பூண்டார்கள். அவ்வமயம் சீதைக்கும், வாலிக்கும், ராவணனுக்கும் இடக்கண்கள் துடித்தன. பெண்பாலுக்கு இடக்கண் துடித்தால் அது நல்ல காலத்துக்கு அறிகுறியாகும். ஆண்பாலுக்கு இடக்கண் துடித்தால் அது கெட்டகாலத்துக்கு அறிகுறியாகும். ராமன் சுக்ரீவனுடைய நட்பானது வாலிக்கும், ராவணனுக்கும் அழிவுகாலம் வரப்போவதை உணர்த்தியது.

சுக்ரீவன் வாலியினுடைய அக்கிரமத்தை ராமனிடம் தெரிவித்தான். "வாலியைக் கொன்று உன் மனைவியையும் ராஜ்யத்தையும் உனக்கு மீட்டுத் தருகிறேன்'' என்று ராமன் சுக்ரீவனுக்கு வாக்குக் கொடுத்தார். ராமன் புருஷோத்தமனகையால் அவர் எண்ணுகின்ற எண்ணம், சொல்கின்ற சொல், செய்கின்ற செயல் யாவும் தர்மத்துக்கு முரணுக இருக்கமாட்டா. ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால் இவ்வுண்மை விளங்கும். "சுக்ரீவா, வாலியைச் சண்டைக்கு இழுத்து அவனேடு போரிடு. நீங்கள் இருவரும் போரிடும்பொழுது நான் வாலியை வீழ்த்தி விடுகின்றேன்'' என்று ராமன் சொன்னர். ராமன் சொல்லியபடி

சுக்ரீவன் வாலியோடு சண்டைபோட்டான். ராமனுடைய உதவி கிட்டவில்லை. சுக்ரீவன் நன்ருக அடிபட்டுத் தப்பிப் பிழைத்தேனென்று மதங்க மஹரிஷி ஆச்ரமத்திற்கு ஓடிவந்தான். "ராமா, உன்னை நம்பி நான் வாலியோடு சண்டைபோட்டு அடிபட்டு அவமானம் அடைந்தேன். உன்னல் உதவமுடியவில்லை யென்பதை முன்பே சொல்லியிருந்தால் நான் வாலியோடு சண்டைக்குப் போயிருக்கமாட்டேன்" என்ருன் சுக்ரீவன். "சுக்ரீவா, நீயும் வாலியும் சண்டை போடும்பொழுது நீங்கள் இருவரும் ஒரே மாதிரி இருந்தீர்கள். வாலி யார்? நீ யார்? என்பதை நான் பாகுபடுத்த முடியவில்லை. வாலியின் மீது அம்பு தொடுப்பதற்குப் பதிலாக உன்மீது நான் அம்பு தொடுத்துவிட்டால் சரணுகதி யடைந்த உன்னைக் கொன்ற பாவம் என்னைச் சாரும். ஆகையால் நான் சும்மா இருந்துவிட்டேன். உன் கழுத்தில் லட்சுமணன் பூமாலை ஒன்று சூடுவான். நானே அப்பூமாலையோடு நீ வாலியுடன் சண்டை செய். அப்பொழுது வாலியை வீழ்த்தி விடுகிறேன்" என்ருர் ராமன். சுக்ரீவன் அடுத்த நாள் வாலியைச் சண்டைக்கு இழுத்தான். வாலிக்குக் கடுங்கோபம் வந்தது. வாலியின் மனைவி தாரை "நாதா, சற்றுப்பொறுங்கள். அவசரப் படாதீர்கள். நேற்று அடிபட்டு ஓடிய உங்கள் தம்பி இன்றைக்குச் சண்டைக்கு அறைகூவுகின்ருன். அவனுக்குப் பின் உதவி இல்லாவிட்டால் இன்று சண்டைக்கு வந்திருக்க மாட்டான். தசரத குமாரர்கள் இப்பக்கம் இருப்பதாக நான் அங்கதன் மூலம் கேள்விப்பட்டேன். ஒருவேளை அவர்களுடைய உதவி அவனுக்குக் கிடைத்திருக்கலாம். ஆகையால் இன்றைக்கு நீங்கள் சண்டைக்குப் போகாதீர்கள்" என்ருள். "தசரத குமாரர்களுக்கும் எனக்கும் எந்தவிதப் பகையும் இல்லை. அவர்கள் எதிர்த்து வந்தால் தான் என்னை என்ன செய்துவிட முடியும்? இன்றைக்கு இவனுக்கு நல்ல பாடம் புகட்டுகிறேன்" என்று வாலி கூறிவிட்டுத் தான் வரம் பெற்று வாங்கிய தங்கச் சங்கிலியைக் கழுத்தில் அணிந்துகொண்டு போருக்குப் புறப்பட்டான். சுக்ரீவனுக்கும் வாலிக்கும் போர் நடந்தது. வாலிமீது அம்பு வந்து பாய்ந்தது. அந்த அம்பில் ராம நாமம் இருந்ததை வாலி பார்த்தான். ராமன் கருணையோடு வாலி முன் நின்ருன்.

வாலி: "ராமா, இத்தகைய அடாத செயல் நீ செய்யலாமா? நான் மற்ருெருவனேடு சண்டை போடும்பொழுது, நீ இடையில் என்மீது அம்பு எய்யலாமா?"

ராமன்: "நீ உன் தம்பியைக் காப்பாற்ற வேண்டும். அதற்குப் பதிலாக அவனுடைய மனைவியை அபகரித்துக்கொண்டு அவனையும் ஓட்டிவிட்டாய். உன் செயல் பொருந்தாத செயல்."

வாலி: "இது எங்களுடைய வீட்டு விவகாரம். அதை நாங்கள் பார்த்துக்கொள்ளுகிருேம். உன்னுடைய ராஜ்யத்தின்மீது ஆசை வைத்தேனு? நீ ஏன் எங்கள் விஷயத்தில் தலையிட்டாய்?"

ராமன்: "அதர்மம் எங்கு தலையெடுக்கிறதோ அதை அழிப்பதற்கு நான் கடமைப்பட்டிருக்கின்றேன்."

வாலி: "ராமா, உன் மனைவியை இழந்ததோடு நீ விவேகத்தையும் இழந்துவிட்டாய். உன் மனைவியைத் திருடிக்கொண்டு போனவன் ராவணன் ஆவான். நான் ஒரு வார்த்தை சொன்னல் கதறிப்பதறி அழுதுகொண்டு சீதையை உன்னிடம் கொண்டு வந்து ஒப்படைத்துவிட்டு அவன் மன்னிப்புக் கேட்பான். இதைச் செய்வதற்குப் பதிலாக ராஜ்யத்தை இழந்த என் தம்பியிடம் நட்புக்கொண்டு என்னைக் கொல்லத் திட்டமிட்ட நீ விவேகத்தை இழந்தவனுகின்ருய்."

ராமன்: "வாலி, நான் உன்னை ஒரு கேள்வி கேட்கின்றேன். ஒருவன் பிறர் மனைவியைத் திருட்டுத்தனமாகக் கொள்ளையடிக்கின்ருன். மற்ருெருவன் பிறர் மனைவியைப் பகிரங்கமாகக் கொள்ளையடிக்கின்ருன். இவ்விருவர்களுள் பெரிய தவறு செய்தவன் யார்?"

வாலி: "சந்தேகத்துக்கிடமில்லாது பிறர் மனைவியைப் பகிரங்கமாகக் கொள்ளையடித்தவன்தான் பெரியதவறு செய்தவனுகின்ருன்."

ராமன்: "திருட்டுத்தனமாகச் சீதையை கொண்டுபோன ராவணனுக்கு மரணதண்டனை கொடுப்பதென்று தீர்மானம் செய்துவிட்டேன். சுக்ரீவன் மனைவியை நீ பகிரங்கமாகக் கொள்ளையடித்திருப்பதால் நீ அவனை விடப்

பெரிய தவறு செய்தவனுகின்ருய். அப்பேர்ப் பட்ட உனக்கு மரணதண்டனே தராது உன் விடம் நட்புக் கொள்வது எங்ஙனம்?''

வாலி: "ராமா, நீ தவ வேடம் பூண்டிருக் கின்ருய். தவ வேடம் பூண்டுள்ள நீ இக் கொடிய கொலேத் தொழிலேச் செய்யலாமா?"

ராமன்: ''முனிவர்கள் ஜப மாலே வைத் திருப்பதற்கு நிகராக நான் கோதண்டம் வைத் திருக்கின்றேன். நான் ஜப மாலேயையும் பயன் படுத்துவேன்; கோதண்டத்தையும் பயன் படுத்துவேன். ரிஷிகளுடன் இருக்கும்போது நான் ஜபமாலேயைப் பயன்படுத்துவேன். அக் கிரமக்காரர்கள் மீது நான் கோதண்டத்தைப் பயன்படுத்துவேன்.''

வாலி: ''ராமா, நீ என்னே முன் எச்சரிக்கை யில்லாது தாக்கியிருக்கின்ருய். அது நியா யமா?''

ராமன்: ''நீ நன்ருகச் சிந்தித்துப்பார். உனக்கு முன் எச்சரிக்கை வந்தது. நீ பெற்ற வரத்தின் செருக்கினுல் அதைப் புறக்கணித்து விட்டாய். தங்கச் சங்கிலி அணிந்திருப்பதனுல் எதிரியினுடைய பலம் பாதி உனக்கு வந்து விடுமென்று எண்ணி உனக்கு வந்த முன் எச் சரிக்கையைப் புறக்கணித்துவிட்டாய்.''

வாலி: ''நீ என்னே நேருக்கு நேர் வந்து தாக்குவதற்குப் பதிலாகப் பயங்கொள்ளி போன்று எனக்குப் பின்னுலிருந்து தாக்கி விட்டாய்.''

ராமன்: ''க்ஷத்திரியன் ஒருவன் தன்னுடைய பலத்தில் பாதியை எதிரிக்குத் தருவது முறை யன்று. எதிரியை ஒழிப்பதுதான் முறை. நான் உன் முன் எதிரியாக வந்து நின்ருல் என் பலத்தில் பாதி உனக்கு வந்துவிடும். நீ என்னே வென்றுவிடுவாய். ஆகையினுல் மறைந்திருந்து தாக்கினேன். ஒரே பாணத்தில் உனக்குப் பாடம் புகட்டியாகிவிட்டது. நான் செய்தது சரியா? தவரு? என்று நீயே நன்ருக எண் ணிப்பார்.''

வாலி நன்ருக எண்ணிப்பார்த்தான். ராமன் செய்தது முற்றும் சரி என்பதை ஒத்துக்கொண் டான். அவ்வமயம் தாரை ஓடிவந்து ''ராமா, கணவனும் மனேவியும் பிரிந்தால் எவ்வளவு துயரம் உண்டாகும் என்பதை நீ அனுபவித் திருக்கின்ருய். என்னுடைய கணவனே என் னிடமிருந்து பிரித்துப் பரத்திடம் அனுப்பு கிருய். என்னேயும் அங்கு அனுப்பிவிடு. நான் அவரைப் பிரிந்திருந்து இங்குக் கஷ்டப்பட முடியாது'' என்ருள். ''தாரா, இன்னும் உன் ஞல் ஆகவேண்டிய காரியங்கள் பாக்கி இருக் கின்றன. ஆகையால் நீ இன்னும் கொஞ்ச காலம்இருந்து ஆகவேண்டும்'' என்ருர் ராமன். ''ராமா, நீ என்னிடம் காட்டியது மறக்கருணே. வெளிக்கு எனக்குக் கேடு செய்வது போன்று காட்டி எனக்கு நலம் செய்துவிட்டாய். நான் செய்த தவறுகளே யெல்லாம் இப்போது உணருகின்றேன். அழிந்து போகும் பூலோக ராஜ்யத்தை என்னிடமிருந்து பறித்து என் தம்பிக்குத் தந்துள்ளாய். சாஸ்வதமான பார மார்த்திகப்பேற்றை எனக்குத் தந்துள்ளாய். உன் கருணேயை என்னென்று சொல்வது!'' என்ருன் வாலி. 'ராம் ராம்' என்று சொல்லிக் கொண்டு வாலி உடலேவிட்டுப் பிரிந்தான். ராமபாணம் மரணத்தறுவாயில் வைத்து முரட ஞன வாலியை ராம பக்தனுக மாற்றியது. வாலி மோட்சமடைந்தான். இரண்டாவது ராம பாணம் வாலிக்கு மோட்சம் தந்தது.

சீதா பிராட்டியைக் கண்டு பிடித்த பெருமை ஆஞ்சநேயனுக்குரியதாயிற்று. அசோக வனத் தில் சீதையைக் கண்ட அனுமான் ராவணனு டைய பலத்தையும் அறிய விரும்பினுன். ராவணனுக்குப் பிரியமான அசோகவனத்தை ஆஞ்சநேயன் நாசம் செய்ய ஆரம்பித்தான். குரங்கு ஒன்று அசோகவனத்தை அழிக்கிறது என்று ராவணனிடம் அரக்கர்கள் முறையிட் டார்கள். உடனே ராவணன் அதைக் கட்டிப் பிடித்துக்கொண்டு வாருங்கள் என்று உத்தர விட்டான். கோபத்துக்கு வசமான அரக்கர் கள் ஆஞ்சநேயனே அடிக்கத் தொடங்கினுர் கள். தற்காப்புக்காக ஆஞ்சநேயன் திருப்பித் தாக்கிய பொழுது பல அரக்கர்கள் மடிந்து போனுர்கள். அப்படி மடிந்து போனவர்களுள் ராவணனுடைய மகனும் ஒருவனுவான். அனு மானேக் கட்டிப் பிடித்துக் கொண்டுபோய் ராவணன் முன் நிறுத்தினுர்கள். கட்டிலகப் பட்டவன் போன்று சென்ற ஆஞ்சநேயன் ராவணன் முன் நின்றதும் 'ராம்' என்று சொல்லி மூச்சை உள்ளே இழுத்து மார்பைப் பெரிதாக்கினுன். அவனேக் கட்டியிருந்த கட்டு

களெல்லாம் அறுந்தன. "உன் வீரர்கள் கட்டிய கட்டைப்பார்" என்று கூறுவது போன்று அந்நிகழ்ச்சி இருந்தது. ராவணன் ராஜாதி ராஜன். அவன் சாதாரணமானவர்களோடு நேரே பேசக்கூடாதாகையால் அங்குள்ளவர்களைப் பார்த்து "இவன் யாரென்று கேளுங்கள்" என்றான். ஆஞ்சநேயன் "ராவணா, நான் உனக்கு ஒருசெய்தி கொண்டு வந்திருக்கின்றேன். அதைச் சொல்லி முடிக்கும் வரையில் பொறுமையாக இருந்து பிறகு என்னை என்ன வேண்டுமானாலும் செய். இரண்டாவது அம்பு எடுக்க அவசியமில்லாது ஒரே அம்பால் வாலியை ஒழித்த ராமனுடைய தூதர்களுள் நான் ஒருவன்," என்று கூறி ராவணனைப் பார்த்தான். வாலி என்று சொன்னதைக் கேட்டதும் ராவணன் அஞ்சினான். அதை ஆஞ்சநேயன் கவனித்துக்கொண்டான். ராவணனிடம் மேலும் ஆஞ்சநேயன் பகர்ந்ததாவது: "சீதையை நீ தூக்கிக் கொண்டு வந்தது தவறு. உன் தவறை உணர்ந்து சீதையைத் திருப்பி ஒப்படைத்து விட்டால் நீ உயிர்தப்பலாம். அப்படித் திருப்பிக் கொடுக்காவிட்டால் ராமனும் சுக்ரீவனும் உன்னைக் கொல்லத் தீர்மானித்திருக்கிறார்கள். மனிதர், குரங்குகளாகிய இரண்டு இனத்தார்கள் மூலமாக மரணம் வரக்கூடாதென்று நீ வரம் வாங்கவில்லை. மனிதர்களும், குரங்குகளும் உன்னைக் கொல்ல வருகிறார்கள். நீ பிழைக்கவேண்டுமென்றால் மனதை மாற்றிக்கொண்டு சீதையைக் கொடுத்துவிடு." இதைக் கேட்டவுடன் ராவணன் கோபமடைந்தான். ஆஞ்சநேயனை வெட்டுமாறு ராவணன் உத்தரவிட்டான். தூதனாக வந்தவனைக் கொல்லக்கூடாதென்று விபீஷணன் தடுத்தான். எனவே ஆஞ்சநேயன் வாலில் தீ வைத்து அவனைத் தெருவில் இழுத்துச் சென்றார்கள். தன்னைப் பிடித்திருந்தவர்களை உதறித் தள்ளிவிட்டு லங்கை நகருக்குத் தீ வைத்துவிட்டு வாலிலிருந்த தீயைக் கடலுக்குள் சென்று அணைத்து விட்டு வெற்றியுடன் திரும்பினான். ராவணனுக்கும் ஆஞ்சநேயன் எச்சரிக்கை கொடுத்து விட்டான்.

சீதையைக் கண்ட செய்தியை ஆஞ்சநேயன் ராமனிடம் தெரிவித்தான். ராமன் பெரிய படையுடன் ராவணன்மீது போருக்கு ஆயத்தமானார். ராமன் எதிர்க்கரைக்கு வந்ததை ஒற்றர் மூலம் அறிந்த ராவணன் மந்திரி சபையைக் கூட்டினான். அம்மந்திரி சபையில் கும்பகர்ணன் பகர்ந்ததாவது: "அரசன் ஒருவன் முதலில் மந்திராலோசனை செய்து பிறகு செயலில் இறங்கவேண்டும். ஆனால் ராவணனாகிய நீ செயலில் இறங்கிவிட்டுப் பிறகு யோசனை கேட்கின்றாய். நீ முதலிலேயே அவ்விரண்டு மனிதர்களையும் போரில் வென்று சீதையைக் கொண்டு வந்திருக்கவேண்டும். அதுதான் வீரனுக்கு அழகு. ஆனால் நீ திருட்டுத்தனமாகச் சீதையைக் கொண்டு வந்திருக்கின்றாய். நீ செய்தது தவறு என்றாலும் நான் உன் தம்பியாகையால் உனக்காகப் போர் புரிகிறேன்." அடுத்து விபீஷணன் பகர்ந்ததாவது: "நீ சீதா பிராட்டியை லங்கைக்குக் கொண்டு வந்த நாள் முதல் லங்கையிலிருந்து ஸ்ரீ போய்விட்டது. லங்கைக்குக் கேடுகாலம் வந்து கொண்டிருக்கிறது. நீ அழிவதோடு லங்கையும் அழிவதற்கு வழிதேடி விட்டாய். சீதையைத் திருப்பி ஒப்படைத்து விடு. அதைத் தவிர வேறு வழியில்லை." விபீஷணன் சொன்னதைக் கேட்டதும் ராவணன், "விபீஷணா, உன்னைக் கொன்று விடுவேன்" என்றான். "நீ என்னை ஒரு நாளும் கொல்ல முடியாது. உன்னைக் கொன்று லங்காபுரியைக் காப்பாற்றுவதற்காக நான் ராமனுடன் சேரப் போகிறேன்" என்று கூறிவிட்டு விபீஷணன் ராமன் பக்கம் போய்ச் சேர்ந்து விட்டான்.

ராம ராவணப் போர் நிகழ்ந்தது. ராவணனுடைய புதல்வர்கள், சேனை வீரர்கள் யாவரும் அழிந்து போனார்கள். கடைசி நாள் ராவணன் ராமனோடு அற்புதமாகப் போர் புரிந்தான். போரின் இறுதியில் சோர்வடைந்தான். ராவணன் சோர்ந்து போனதைப் பார்த்த ராமன் கருணையோடு பேசுகின்றார். "பத்துத் தலையுடையோய்! நீ அற்புதமாகப் போர் புரிந்தாய். உன்னுடைய பராக்கிரமத்தை மெச்சுகின்றேன். ஆனால் நான் இல்லாத சமயம் பார்த்துச் சீதையை நீ திருடிக்கொண்டு வந்துவிட்டாய். அது வீரனுக்குரிய செயல் அன்று. அதற்குத் தண்டனையாக நான் நாளை உன்னைக் கொல்லத் தீர்மானித்து விட்டேன். உனக்கு உயிர்ப்பற்று இருக்குமானால் சீதையை என்

னிடம் கொண்டு வந்து ஒப்படைத்து விட்டு மன்னிப்புக் கேட்டுக்கொள். இலங்காபுரியில் இருப்பதற்கு இனி உனக்கு அனுமதி இல்லை. லங்கையை விட்டு எங்காவது ஓடிவிடு. லங்கையை விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து விட்டேன். சீதையை ஒப்படைக்கச் சம்மதம் இல்லாவிட்டால் நாளைக்கு அழிந்து போவதற்கு உன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டு வா.'' ''அற்ப மானுடன் நீ. நீயா என்னை அழிக்கப்போகின்றாய்?'' என்று கூறிச் சென்ற ராவணன் அடுத்த நாள் போருக்கு ஆயத்தமாக வந்தான். ''ராவணா, கடைசி ஆயுதமாகிய பிரம்மாஸ்திரம் வருகிறது. இப் போதாவது மனம் மாறுகின்றாயா?'' ''ராமா, உன்னால் என்ன செய்யமுடியும்?'' என்று ராவணன் கூற ராமபாணம் அவன்மீது பாய்ந் தது. ராவணன் ஒழிந்தான்.

ராமபாணம் மூன்று இடங்களில் மூன்றுவித மாக வேலை செய்தது. சான்றோரிடம் நடந்து கொள்கின்ற முறையில் பரசுராமனிடம் அது வேலை செய்தது. நலம், கேடு கலந்திருக்கின்ற மனிதனிடம் நடந்துகொள்ளுகிறமுறையில் அது வாலியினிடம் வேலை செய்தது. கேடே வடி வெடுத்துள்ள ராவணனிடத்தில் அவனுக்கேற்ற முறையில் அது வேலை செய்தது. உடலுக்கு நோய் வந்தால் அந்த நோயைக் களைந்தாக வேண்டும். லங்காபுரிக்கு ராவணன் நோயாக இருக்கின்றான் என்று விபீஷணன் பகர்ந்தான். ராமன் அந்த நோயைக் களைந்தெறிந்தார். யார்மீது எத்தகைய நடவடிக்கை எடுக்க வேண்டுமோ அதைவிட்டு இம்மியளவும் ராமன் பிசகவில்லை. எந்த இடத்திலும் முறைதவறி அனாவசியமாக அவர் ஆயுதத்தைக் கையாள வில்லை. அரசன் ஒருவன் முறைதவறித் தன் ஆதிக்கத்தைச் செலுத்தக்கூடாது. அப்படிச் செலுத்துவானாகில் அவன் அழிந்துபோவான். எல்லா அரசாங்கத்துக்கும், எல்லாக்காலத்துக் கும் அதுதான் பொருந்தும். அரசாட்சி வாய்ப் பது ஈசுவரப் பிரசாதமாகும். தராசு போன்று நடுநிலையிலிருந்து நீதி வழங்கினால்தான் ராஜ் யம் உறுதிபெறும். ராவணன் தனக்கிருந்த ஆதிக்கத்தை முறைதவறிக் கையாண்டதால் அவன் அழிந்தான். வாலி ராவணனைக் காட் டிலும் நல்லவனாக இருந்ததால் மரணத் தறுவா யில் அவன் திருந்தியமைந்தான். பரசுராமன் இன்னும் நல்லவராக இருந்ததால் அவரை உயிரோடு ராமபாணம் திருத்தியமைத்தது. ராமபாணத்தை மீறி யாரும் நடந்துகொள்ள முடியாது. ராமபாணத்துக்குத் தலைவணங்கு கின்றவர்கள் நீதிக்குத் தலைவணங்குபவர்கள் ஆகிறார்கள்; தெய்வத்துக்குத் தலைவணங்கு பவர்களாகிறார்கள். அவர்களுக்கு ஒருநாளும் அழிவில்லை. தர்மம், நீதி ஆகிய இறைவ னுடைய திட்டத்திலிருந்து பிசகி நடக்கின்ற வர்களுக்கு என்ன கதி வரும் என்பதை ராம பாணம் புகட்டுகின்றது.

நேர்மையினின்று, தர்மத்தினின்று பிசகாது வாழ்வாங்கு வாழுமிடத்து ஆக்கம் நம்மைத் தேடி வருகின்றது. தர்மத்தினின்றும் பிசகு கின்றபொழுது நமக்கு நாமே அழிவைத் தேடிக் கொள்கின்றோம். இச்சிறந்த செய்தியை ராம பாணம் யாண்டும் உலகுக்குப் புகட்டிக்கொண் டிருக்கிறது. ராமனுடைய லீலையை, ராமதத்து வத்தை, ராமன் கோதண்டத்தைக் கையாண்ட முறையைக் கேட்கின்ற நாம் நேர்மையாக வாழத் தெரிந்துகொள்ள வேண்டும். அயலா ருக்கு நலம் செய்யத் தெரிந்துகொண்டால், பக்திபூர்வமாக வாழத் தெரிந்துகொண்டால் நாம் தெய்வத்துக்கு உரியவர்களாகின்றோம். தர்மத்தினின்றும் பிசகுவோமானால் ராமபாணம் நம்மை விடாது. முழுமுதற்பொருள் ராமனாக அவதரித்து வந்து இவ்வுண்மையை நமக்குப் புகட்டியிருக்கின்றார். இதையறிந்து நாம் நேர்மையாக வாழக் கற்றுக்கொள்ளவேண் டும். பக்தியை வளர்க்க நாம் கற்றுக்கொள்ள வேண்டும். இறைவனிடத்துச் சரணாகதி அடை யக் கற்றுக்கொள்ள வேண்டும். இறைவ னுடைய பேரருளால் சன்மார்க்கத்தை யறிந்து, தர்மத்தை யறிந்து, பக்தி இன்னதென்பதை யறிந்து அவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். அவற்றைக் கடைப்பிடிக்கின்ற அளவு நாம் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்தியவர் களாகின்றோம். தர்மநெறி நிற்பதும், பக்தியை வளர்ப்பதும் நம்நாட்டுப் பண்புகளாகும். கட வுள் பக்தி வாய்க்கப் பெற்றவர்களாக நல்வாழ் வில் ஈடுபடுவோமாக. உள்ளத்தில் குடி கொண்டுள்ள முழுமுதற்பொருள் யாண்டும் நமக்குத் துணைபுரிந்து வருவாராக. (முற்றும்)

# தெய்வாம்சம் பொருந்திய கிறிஸ்து

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள லாஸ்ஏஞ்சல்ஸ் என்னுமிடத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு )

[17 ஆம் பக்கத் தொடர்ச்சி]

கிறிஸ்துவர்களின் வேத நூலாகிய பைபிளில் சொல்லப்பட்டுள்ள உவமைகள் யாவும் ஆசியாக் கண்டத்திலுள்ளவைகளாகும். பைபிளிலுள்ள கற்பனைச் சித்திரங்களும், காட்சிகளும், குறிப்பிட்டுள்ள இடங்களும், மனப்பான்மைகளும், கவிதைகளும், சின்னங்களும் ஆசியாக் கண்டத்தைச் சார்ந்தவைகளாக இருக்கின்றன. வெட்டவெளியைப் பற்றியும், வெப்பத்தைப் பற்றியும், சூரியனைப் பற்றியும், பாலைவனத்தைப் பற்றியும், நீர் வேட்கைகொண்ட மக்கள் விலங்குகள் பற்றியும், ஆடவர்களும், பெண்டிர்களும் கிணறுகளுக்குச் சென்று குடங்களில் நீர் நிரப்பிக்கொண்டு வருவது பற்றியும், ஆட்டு மந்தைகளைப் பற்றியும், உழவர்களைப் பற்றியும், பயிர்த்தொழிலைப் பற்றியும், தண்ணீர் இறைக்கும் இயந்திரங்களைப் பற்றியும் பைபிளில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆங்குச் சொல்லப்பட்டுள்ள அனைத்துக் காட்சிகளையும் இன்றைக்கும் ஆசியாக் கண்டத்தில் நாம் காணலாம்.

சமயக்குரல் என்றைக்கும் ஆசியாவிலிருந்தே ஒலிக்கின்றது. சமயத்துக்கு ஆசியாவே பிறப்பிடம். அரசியல் குரல்தான் ஐரோப்பாவின் குரலாகும். ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு துறையில் பெரியதாக இருக்கின்றது. ஐரோப்பாவின் குரல் பழங்கால கிரேக்க நாட்டின் குரலாகும். கிரேக்கர்களுக்குத் தங்களைச் சூழ்ந்துள்ள சமுதாயத்தின் சிறப்பே உயர்ந்த லட்சியமாகிறது. தங்கள் சமுதாயத்திற்கு அப்பால் உள்ளவையெல்லாம் நாகரிகமற்றவை என்று கருதுகின்றனர். கிரேக்கர்களைத் தவிர மற்றவர்கள் யாரும் வாழத் தகுதியற்றவர்கள் என்றும் நினைக்கின்றனர். கிரேக்கர்கள் செய்வதுதான் சரியானது என்றும், நேர்மையானது என்றும் நினைக்கின்றார்கள். அவர்களுக்குப் புறம்பானவைகள் எல்லாம் சரியானவை அல்ல என்றும், தகுதியற்றவை என்றும், எண்ணுவதோடு அவைகள் வளர்வதற்கும் இடம் தர மாட்டார்கள். கிரேக்கர்கள் ஆழ்ந்த மனித உணர்ச்சி உள்ளவர்கள்; ஆழ்ந்த மனித இயல்பு உடையவர்கள்; ஆழ்ந்த கலையுணர்ச்சியுடையவர்கள்; கிரேக்கர்கள் உலக முழுவதிலும் வசித்துவருகிறார்கள். இயற்கைக்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. அவர்களுடைய கவிதைகளும் உலகை ஒட்டியவைகளாகவே இருக்கும். அவர்களுடைய தெய்வங்களும், தேவதைகளும், மானுடத்தன்மை பொருந்தியவர்களாக இருப்பார்கள். அவர்கள் அழகை ரசிக்கின்றார்கள். ஆனால் அவர்கள் ரசிக்கும் அழகு புற அழகாகும். மலையின் அழகும், பனிக்கட்டியின் அழகும், புஷ்பங்களின் அழகும், வடிவங்களின் அழகும், முகத்தின் அழகும், மனிதத் தோற்றத்தின் அழகும், கிரேக்கர்களின் உள்ளத்தைக் கவர்வனவாக இருக்கின்றன. பின் வந்த ஐரோப்பியர்களுக்குக் கிரேக்கர் ஆசிரியர்களாகத் திகழ்வதால் ஐரோப்பியர்களின் குரல், கிரேக்கர்களின் குரல் என்றே மொழியலாம்.

ஆசிய மக்களின் பாங்கோ வேறுவிதமானது. விரிந்த கண்டமாகிய ஆசியாவைக் கவனித்துப் பாருங்கள். ஆசியாவினுடைய மலைகளின் உச்சிகள் மேகத்தையெல்லாம் கடந்து நீல வானத்தையே தொடுவதுபோன்று இருக்கின்றன. பல மைல்கள் தூரம் விரிந்து கிடக்கும் பாலைவனத்தைப் பாருங்கள். ஒருதுளி ஜலம் கூட அங்கு அகப்படாது. புல் நுனியையும் அங்குக் காணமுடியாது. இது ஒரு காட்சி. அடர்ந்த காடுகளும், கடலை நோக்கி ஓடும் ராக்ஷஸ நதிகளும் மற்றொரு காட்சியாகும். இயற்கை வனப்பின்மீது செலுத்தப்பட்டு எழுந்த கீழ்நாட்டவர்களுடைய உள்ளத்தின் உணர்வானது பேருணர்வாக மாறியது. கிரேக்கர்களுடைய உள்ளம் புற உலகை நோக்கிச் சென்றது. கீழ் நாட்டவருடைய உள்ளம் அக உலகை நோக்கிச் சென்றது. அவர்களுக்கு இயற்கையினிடத்து எத்தகைய ஆர்வம் இருந்ததோ அவ்வளவு ஆர்வம் அக உலகத்தை ஆராய்ச்சி பண்ணுவதில் கீழ்

நாட்டவர்களுக்கு இருந்தது. கிரேக்கர்களுக்கு இடையில் ஒரு சிறு கூட்டத்தினரிடையே மட்டும் ஆர்வம் இருந்தது. ஆனல் ஆசிய மக்களின் உணர்வோ மிகப் பரந்து இருந் தது. இன்றைக்கும் ஆசியாவில் பிறப்போ, வருணமோ, மொழியோ, மக்களை வகைப் படுத்துவதில்லை. மக்களை வகைப்படுத்து வதற்குச் சமயம்தான் பயன்படுத்தப்படுகிறது. நாங்கள் கிறிஸ்துவர்கள்; நாங்கள் முகமதியர் கள்; நாங்கள் ஹிந்துக்கள்; நாங்கள் பௌத் தர்கள் என்று மக்கள் தங்களைக் கூறிக் கொள்வார்கள். ஒரு பௌத்தன் சீன தேசத் தவனுகவோ பாரசீக தேசத்தவனுகவோ இருக் கலாம். எந்த நாட்டைச் சார்ந்தவர்களாக இருந்தாலும், புத்தமதத்தைச் சார்ந்தவர்கள் யாவரும் அவர்களுக்கிடையில் சகோதரர்கள் ஆகிருர்கள். மனித சமுதாயத்தைச் சமயம்தான் பிணைத்து வைக்கின்றது. சமயம்தான் மனித சமுதாயத்திற்கிடையில் ஒற்றுமையை வளர்க் கின்றது. கீழை நாட்டவர்கள் இயற்கைக்கப் பால் உள்ளதைப்பற்றிக் காணும் காட்சியுடை யவர்களாக இருக்கின்றனர். மலைகளிலிருந்து விழும் அருவிகள் எழுப்பும் அலைகளின் ஓசை யும், ஆரண்யங்களில் இசைபாடும் பறவை களின் இன்னிசையும், சந்திர, சூரிய, நட்சத்தி ரங்கள் ஆகிய கோள்களின் அழகும் கீழ் நாட் டவருடைய உள்ளத்தை வேண்டிய அளவு கொள்ளைகொள்கின்றன. ஆனல் அவர்கள் அவைகளைக்கண்டு அவற்ருேடு திருப்திஅடைவ தில்லை. அவர்களுடைய உள்ளம் அவைகளையும் கடந்து அப்பால் செல்ல விரும்புகிறது. இவ்வுல கம் அவர்களுக்கு ஒரு பொருட்டு அன்று. மனித சமுதாயத்தின் நாகரிகத்திற்கே பல நூற் ருண்டுகளாகக் கீழ்நாடு தொட்டிலாக அமைந் திருக்கின்றது. செல்வத்தின் மேடு பள்ளங் களை அது கண்டிருக்கிறது. ராஜ்ஜியங்கள் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றி மறைந்ததை யும், சக்கரவர்த்திகள் ஒருவர்பின் ஒருவராகக் கால வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட தையும் அது கண்டிருக்கிறது. மனித சமுதா யத்தின் புகழ், செல்வம், சக்தி ஆகிய எல் லாம் அழிந்து போகின்றன. மனித அறிவும் மறைந்து போகிறது. இவைகளையெல்லாம் கீழ்நாட்டார் உள்ளம் அற்பமாக எண்ணு கின்றது. இவைகளெல்லாம் அழிந்துபோவ தில் வியப்பொன்றும் இல்லை என்றும் இவை களுக்கு அப்பால், மரணத்துக்கு அப்பால் அழியாத ஒன்று இருக்கின்றது என்றும் அதை அறிய வேண்டுமென்றும் கீழ்நாட்டார் உள்ளம் விரும்புகின்றது. துன்பமும் அழிவும் உள்ள இந்த உலகத்திற்கப்பால் அழியாத ஆனந்த மயமான ஒன்றைக் காணவேண்டு மென்று கீழ்நாட்டார் உள்ளம் விரும்புகின் றது. இத்தகைய கருத்துக்களை மக்களுக்கு வலியுறுத்துவதற்குக் கீழ்நாட்டுத் தீர்க்கதரிசி கள் அயர்வுறுவதில்லை. கீழ்நாட்டுத் தீர்க்க தரிசிகள் யாவரும் இத்தகைய நன்மொழிகளை வழங்கியிருக்கிருர்கள். விதிவிலக்கு யாரு மின்றி இத்தகைய நன்மொழிகளை வழங்கிய வர்கள் கீழ்நாட்டவர்கள் என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்.

ஏசுநாதருடைய வாழ்க்கையில் "இவ் வாழ்வு நிலையற்றது; இதனினும் மேலான வாழ்வு உண்டு; அதைப் பற்றிக்கொள்ளுங் கள்" என்கின்ற செய்தியைக் காண்கின்ருேம். உண்மையான கீழ்நாட்டான் போன்று அவ் வுண்மையைச் செயல்படுத்தும் வீரராக அவர் இருந்தார். மேல்நாட்டவர்களாகிய நீங்கள் ராணுவம், ஆட்சி, இன்னும் உங்களுக்குரிய மற்ற துறைகளில் செயல்திறன் உடையவர் களாக விளங்குகிறீர்கள். உங்களுக்குரிய துறைகளில் உங்களைப் போன்று கீழ்நாட்டான் செயல்திறன் உடையவனுக இருக்கமுடியாது. ஆனல் அவனுக்குரிய சமயத்துறையில் அவன் செயல் திறன் உடையவனுக விளங்குவான். கீழ்நாட்டாருக்கு ஒருவன் தத்துவம் உபதே சிப்பானுனல் அடுத்த நாளே நூற்றுக்கணக் கான மக்கள் அதைத் தங்கள் வாழ்க்கையில் செயல்படுத்த முயலுவார்கள். ஒரு மனிதன் ஒற்றைக்காலில் நிற்பது முக்தியைக் கொடுக்கு மெனப் போதிப்பானுனல் அதை உடனே செயல்முறைக்குக் கொண்டுவரும் ஐந்நூறு சீடர்கள் அவனுக்குக் கிடைத்துவிடுவார்கள். இது நகைப்புக்குரிய விஷயமென்று நீங்கள் கருதலாம். ஆனல் சற்றுச் சிந்தித்துப் பாருங் கள். அக்கொள்கையில் அவர்களுக்கு எத்த கைய ஆர்வம் இருக்கிறது என்பது விளங்கு கிறதன்ருே! மேனட்டார்களாகிய உங்க

ளுக்கு முக்தியைப் பற்றிய பேச்சு வெறும் அறிவுப் பயிற்சியை மட்டும் தரும். அப்பேச்சைச் செயல் முறைக்குக்கொண்டுவர மாட்டார்கள். மேநாட்டில் சிறந்த சொற்பொழிவாற்றும் போதகர் சிறப்புடையவராகக் கருதப்படுவார்.

கீழ் நாட்டுப் பண்புகள் அனைத்தும் ஏசுநாதரிடம் செயல்பட்டு வந்ததை நாம் காண்கின்றோம். எனவே அவர் கீழ் நாட்டார் ஆகின்றார். அழிந்துபோகும் இவ்வுலகத்திலிடத்தும், இவ்வுலகப் பொருள்களிடத்தும் அவருக்கு நம்பிக்கை இல்லை. எந்த நூலையும் உள்ளபடி நாம் கற்கவேண்டும். நம் கொள்கைகளுக்கேற்ப நூல்களைத் திரிவுபடுத்திப் பொருள் காணக் கூடாது. நூல்களும் ஒரு வரையறைக்குட்பட்டவை. சமயத்தை, புலனின்பத்தை நிறைவேற்றுவதற்குரிய கருவியாகச் செய்து விடக்கூடாது. நாம் அனைவரும் நேர்மை உடையவர்களாக இருப்பதில் கருத்துச் செலுத்த வேண்டும். உயர்ந்த லட்சியத்தைப் பின்பற்றுவதற்கு நம்மால் முடியாவிட்டால் நம்முடைய பலவினத்தை நாம் ஒத்துக்கொள்ள வேண்டும். யாரும் லட்சியத்தைக் கீழ்நிலைக்குக் கொண்டுவர முயலக்கூடாது. ஏசுநாதருடைய வாழ்க்கையைப்பற்றி, மேல்நாட்டு மக்கள் தரும் வெவ்வேறு விவரணங்களைப் பற்றிக் கேட்கும் ஒருவன் உள்ளம் துன்பமடைகிறது. அவர் எப்படி இருந்தார்; எப்படி இருக்கவில்லை என்பதைப் பற்றி நான் அறியேன். அவரை ஒரு பெரிய அரசியல்வாதியாக ஒருவன் சித்திரிக்கின்றான்; மற்றொருவன் சேனைத் தலைவராகச் சித்திரிக்கின்றான்; மற்றொருவன் தேசப் பற்றுள்ள யூதரென்று சித்திரிக்கின்றான். இங்ஙனம் அவரைக் கருதுவதற்கு நூல்களில் ஏதேனும் அத்தாட்சி இருக்கிறதா? சான்றோர்களுடைய வாழ்க்கைக்கு வியாக்கியானம் அவர்களுடைய சொந்த வாழ்வே ஆகும். "குள்ள நரிகள் தங்குவதற்குப் பொந்துகள் இருக்கின்றன. ஆகாயத்தில் திரியும் பறவைகளுக்குக் கூடுகள் இருக்கின்றன. கடவுள் மைந்தனாகிய ஏசுவுக்கு எங்கும் இடம் இல்லை" என்று ஏசுநாதர் இயம்புகிறார். இவ்வுலகில் எதையும் சொந்தம் பாராட்டாதிருப்பதே முக்திக்குரிய வழியாகும் என்பது ஏசுநாதர் கருத்தாகும். பற்றை விடுவதே முக்திக்கு மார்க்கமாகும் என்பது அவர் கூறியதன் கருத்தாகும். நீறு பூசிக் கந்தையையுடுத்திக் கொள்வது நமக்கியலாது என்பதை ஒத்துக் கொள்ளுகிறோம். நம்முடையது என்ற பற்று இன்னும் நம்மிடத்தில் இருக்கிறது. பணம், பொருள், செல்வாக்கு வேண்டுமென்று விரும்புகிறோம். அந்தோ! நம் நிலைதான் என்னே! நம்முடைய நிலைமையை நாம் ஒத்துக்கொள்வோம். மனித சமுதாயத்தை உயர்த்த வந்த ஞானகுரவருக்கு அவமானத்தை நாம் உண்டுபண்ணக் கூடாது. அவருக்குக் குடும்பபந்தம் எதுவும் இல்லை. சரீர அபிமானம் அவருக்கு இருந்ததென்று நீங்கள் நினைக்கிறீர்களா? மனிதனாக அல்லது கடவுள் ஒளிபெற்று இவ்வுலகுக்கு வந்த அவரை விலங்குத் தன்மையுடையவராக நீங்கள் நினைக்கலாமா? அவரைப் பற்றிப் பலவிதமாக மக்கள் பேசுகிறார்கள். அவரிடம் பால் உணர்ச்சி இல்லை. அவர் ஆத்மசொருபம். மனித நலனுக்காக மனித சரீரத்தில் வாழ்ந்த ஆத்மா அவர் ஆவார். ஆன்மாவிடத்தில் பால்வேற்றுமை இல்லை. உடல் பற்றை ஒழித்த அவருக்கு விலங்கியல்போடும், சரீரத்தோடும் எத்தகைய உறவும் இல்லை. இந்த லட்சியம் மிக மேலானது. நம்முடைய தகுதிக்கு அப்பாற்பட்டது. அவ் லட்சியத்தை நமக்குரியதென்று ஏற்றுக்கொண்டு அதற்கேற்ப வாழ முயல்வோமாக. ஆனால் நாம் இன்னும் அந்த லட்சியத்தை அடையவில்லை என்பதை மட்டும் ஞாபகத்தில்வைத்துக்கொள்வோமாக.

ஏசுநாதர் தம்மை ஆத்மசொருபமாக நினைத்தார். அதைத் தவிர வேறு எண்ணமோ, செயலோ அவருக்கு இல்லை. தேகாத்ம புத்தியற்ற, எல்லையற்ற ஆத்ம சொருபம் அவர். தம்மைப்பற்றி அத்தகைய கருத்து கொண்டிருந்ததோடு மற்றவர்களைப்பற்றியும் அவர் உயர்ந்த கருத்துக்கொண்டிருந்தார். ஆணானாலும், பெண்ணானாலும், யூதரானாலும், மற்ற சமயத்தினரானாலும், பணக்காரனானாலும், ஏழையானாலும், ஞானியானாலும், பாபியானாலும் ஆத்மசொருபங்களாகவே அவருக்குக் காட்சி தந்தனர். ஆத்மசொருபத்தை உணரவேண்டும் என்பதையே அனைவருக்கும் அவர் காட்டித்தந்தார்.

(தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 114

669. अन्नदा அன்னதா — அன்னத்தைக் கொடுப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

கல், புல் நிலையிலிருந்து மக்கள், தேவர்கள் ஈருக எண்ணிறந்த படித்தரங்களில் எண்ணிக்கையில் அடங்காத அனந்தங்கோடி ஜீவராசிகள் உயிர்வாழ்ந்து வருகின்றன. உடல் எடுத்து உயிர்வாழ்ந்திருப்பவைகளனைத்துக்கும் உணவு தேவை. உணவுக்கு அன்னம் என்பது பொதுப் பெயர். உயிர்கள் எடுத்துள்ள ஸ்தூல சரீரத்துக்கு அன்னமயகோசம் என்பது பெயர். உண்ணாது எந்த உயிரும் ஜீவித்து இருக்க முடியாது. ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவனவாகிய உயிர்களனைத்துக்கும் அந்தந்த நிலைகளில்அன்னை பராசக்தி உணவை வழங்கி வருகின்ருள். கல்லினுள் உள்ள சிறு தேரைக்கும் எப்படியோ உணவு எட்டுகிறது. உணவை அம்பிகை முறையாக வழங்கி வருவதால் அவள் அன்னபூர்ணா என்னும் பெயர் பெற்றுள்ளாள். இயற்கையை முறையாக ஆராய்ந்து பார்த்தால் இவ்வுண்மை எளிதில் விளங்குகிறது. ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய ஜீவகோடிகள் எப்படி எப்படியோ தங்களுக்குத் தேவையாயுள்ள உணவைப் பெற்று வருகின்றன. நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகிய நான்கு பூதங்களினின்றும் உணவு வந்துகொண்டிருக்கிறது. காற்றில் என்ன உணவு இருக்கிறது என்று நாம் எண்ணலாம். மரம், செடி, கொடிகள் காற்றினின்றே தங்களுக்குத் தேவையாயுள்ள உணவில் செம்பாதியை எடுத்துக் கொள்கின்றன. அதேவிதத்தில் நிலத்தினின்று வேர்கள் வாயிலாக உணவை வாங்கிக் கொள்கின்றன. சூரிய வெப்பமும், அதினின்று வடிவெடுத்திருக்கின்ற ஸ்தாவர ஜங்கமங்களாகிய அனைத்தும் தங்களுக்குத் தேவையாயுள்ள வெப்பத்தை ஏற்று வாழ்ந்து வருகின்றன.உயிரற்றுப் போகுமிடத்து உடலில் தணுப்புத் தானாகத் தென்படுகிறது. அதே விதத்தில் உயிர்வகைகளுக்கு நீரும் இன்றியமையாத உணவாக இருக்கிறது.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை.

பிறகு நிலத்தினின்று உணவு வகைகள் ஏராளமாக உருவெடுப்பது வெளிப்படை. ஆக அன்னை தானே இந்த நான்கு பூதங்களாக இருந்து உணவாக வடிவெடுத்து உயிர்களை ஓம்பி வருகிருள். கண்கூடாகத் தெரிகிற இவ்வுண்மையை ஆராய்ந்து பார்க்குமிடத்தே அன்னையின் மகிமை இனிது விளங்குகிறது.

ஈண்டு மனிதனைப் பற்றிய பேருண்மை ஒன்றை ஞாபகப்படுத்திக்கொள்வது அவசியம். மனிதனைத் தவிர மற்ற உயிர்வகைகள் சாகுபடி செய்வதில்லை. அறுவடை செய்து களஞ்சியத்தில் தானியங்களைப் பாதுகாத்து வைப்பதில்லை. அப்படியிருந்தும் நாள்தோறும் அவைகளுக்குத் தேவையான உணவு ஏதேனும் ஒரு விதத்தில் அகப்படுகிறது. ஹிமாசலத்தின் உட்பகுதியிலுள்ள அமரநாதம் என்னும் சிவ க்ஷேத்திரத்திற்குரிய குகையினுள் புருக்கள் சில வசித்து வருகின்றன. வருஷம் முழுதும் அப்பிரதேசம் உறைபனிக்கட்டி மயமாக இருக்கிறது. புருக்களுக்கேற்ற உணவை அப்பகுதியில் எங்குமே காணமுடியாது. அப்படியிருந்தும் அவைகள் இனிது ஜீவித்து வருவதுதான் அன்னையின் மகிமை. அந்தந்த உயிருக்குத் தேவையான உணவை அவள் ஏதேனும் ஒரு விதத்தில் கரவாது வழங்கி வருகின்ருள். அப்படியிருந்தும் விசுவாசம் கெட்ட மனிதன்தான் பெருமிதமாக அன்னவிசாரத்தில் அல்லல்பட்டுக் கொண்டிருக்கின்ருன். மக்களுள் அன்னையின் அருளை முழுதும் சார்ந்திருப்பவர்களுக்கே உண்பதைப் பற்றிய கவலை உருவெடுப்பதில்லை. தனக்கு எவ்விதத்திலும் அன்னையின் அருளால் அன்னம் வந்து வாய்க்கும் என்ற உறுதியான எண்ணம் படைத்திருப்பவனே அன்னதா என்னும் நாமத்தைப் படைத்துள்ள பராசக்தியை முறையாகப் போற்றுபவன் ஆகிருன்.

670. वसुदा வஸுதா — செல்வத்தை அல்லது ரத்தினத்தைக் கொடுப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

தங்கம், வெள்ளி, தாமிரம் ஆகியவைகள் தனம் எனக் கருதப்படுகின்றன. வைரம், வைடூரியம், மரகதம் முதலிய ஒன்பது வகைக்

கற்கள் நவரத்தினங்கள் எனக் கருதப்படுகின்றன. உண்மையில் இவையாவும் பிருதிவி பூதத்தினுடைய கூறுகளாகிய மண்ணும் கல்லுமேயாம். விலங்கு நிலையிலிருக்கும் மனிதனுக்கு இத்தகைய தனங்களும், ரத்தினங்களும் விலையுயர்ந்தவைகள் என விளங்கா. உலகப்பற்று வைத்திருக்கிற மக்களுக்கு இவையாவும் கிடைப்பதற்கு அரிய பேறுகளாகின்றன. பின்பு பக்தர்களுக்கும் ஞானிகளுக்கும் யோகிகளுக்கும் இவையாவும் பொருளற்றவைகளாகின்றன. ஏனென்றால் வைராக்யத்தின் உச்ச நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். ஆத்ம சாதனத்தில் மேலோங்கியிருக்கும் பரமஹம்சர்களுடைய மேனியின் மீது தங்கம், வெள்ளி போன்ற உலோகங்கள் படிந்தால் அவைகள் அவர்களுக்குத் துன்பத்தை உண்டுபண்ணுகின்றன. பின்பு ரத்தின வகைகளை மின்னுகின்ற கற்கள் என்றே அவர்கள் பொருள் படுத்தாது விட்டுவிடுகின்றனர். உலகப் பற்றுடையவர்களுக்குத் தன வகைகளும் ரத்தின வகைகளும் சௌபாக்கியங்கள் ஆகின்றன. அன்னையின் பேரருளால் அவையாவும் தங்களுக்கு வாய்த்திருக்கின்றனவென்று மகிழ்வுற்று இருக்கின்றனர். வஸுதா என்னும் அன்னையின் நாமம் அவர்களுக்குப் பொருள் பொதிந்த நாமமாகிறது. தீர்க்கதரிசிகளுக்கோ மண்ணும் பொன்னும் ஒன்றே. பிரகிருதியின் வெவ்வேறு கூறுகள் என அவர்கள் அவைகளை ஒதுக்கித் தள்ளுகின்றனர். நல்ல ஆத்மசாதகர்கள் இந்த நாமத்துக்கு மதிப்புத்தரலாகாது.

671. वृद्धा வ்ருத்தா—வயது முதிர்ந்தவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இவ்வுலகைத் தொல்லுலகம் என்கின்றோம். கற்பகாலமாக நிலைத்திருப்பதால் இது இங்ஙனம் கூறப்படுகிறது. ஆனால் இதற்குக் காரணமாயிருக்கின்ற மூலப்பிரகிருதி அன்னையின் சொருபமாம். ஆதலால் அவளை அனைத்துக்கும் மூத்தவளாயிருக்கும் தொண்டு கிழவி என்று கூறுவது பொருந்தும். இதே கிழவிக்கு மற்றொரு இடத்தில் நித்திய யௌவனா என்னும் பெயர் வாய்த்திருக்கிறது. ஆகையால் இவளை அனைத்துக்கும் மூத்தவள் என்றும், யாண்டும் இளமை மாறாத குமரி என்றும் கருதுவதில் பிழை இல்லை. ஆனால் வ்ருத்தா என்னும் நாமம் தத்துவவிசாரத்துச்கு ஆத்மசாதகனொருவனுக்கு ஒருபோக்கில் பயன்படுகிறது. உருண்டோடுகிற காலச் சக்கரம் உடல் எடுத்திருக்கிற அனைவரையும் கிழத்தனத்தில் கொண்டு சேர்க்கிறது. பராசக்தி தானே கிழவி ஆகின்றபொழுது தேய்ந்துபோன அந்த நிலையை வேறு யார்தான் தவிர்க்க முடியும்! எழிலும், இளமையும் நிலைபேறு உடையவைகள் ஆகமாட்டா என்னும் உண்மையை வ்ருத்தையாயிருக்கின்ற பராசக்தி போதித்துக்கொண்டிருக்கிறாள்.

672. ब्रह्मात्मैक्यस्वरूपिणी ப்ரஹ்மாத்மைக்ய ஸ்வரூபிணீ — பிரம்மமும், ஆத்மாவும் ஒன்றுபட்டுள்ள வடிவத்தில் இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இந்த நாமத்தில் அடங்கியுள்ள ஆத்மா என்னும் பதம் ஜீவாத்மனைக் குறிக்கிறது. ஜீவாத்மன் எப்பொழுதாவது பிரம்மன், அல்லது பரமாத்மனுக்குப் புறம்பாக இருந்ததுகிடையாது. சமுத்திரம் அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. அதில் ஓயாது அலைகள் வடிவெடுத்து விளையாடிக்கொண்டிருக்கின்றன. அந்த அலைகள் ஒரு க்ஷணப் பொழுதுக்காவது சமுத்திரத்துக்கு அன்னியமாக இருக்க முடியாது. சமுத்திரத்தில் உருவெடுத்து அதில் சிறிதுகாலம் நிலைத்திருந்து பிறகு அதே சமுத்திரத்தில் ஒடுங்குவது அலையின் போக்கு. எங்ஙனம் சமுத்திரமும், அலையும் இணைபிரியாது ஒன்றுசேர்ந்து இருக்கின்றனவோ அங்ஙனம் பிரம்மமும், ஜீவாத்மாவும் யாண்டும் இணைபிரியாது இருந்து வருகின்றன. பரப்பிரம்மத்துக்கு ஜீவ வியக்தியாக வடிவெடுத்து வரும் பாங்கு பராசக்தியைப் பொறுத்திருக்கிறது. பிரம்மத்துக்கும், பராசக்திக்கும் இடையில் உள்ள இணக்கத்தை ஓர் உபமானத்தின் மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சதேவர் விளக்குகிறார். சுருண்டு படுத்துகிடக்கும் சர்ப்பத்துக்கு நிகர் பரப்பிரம்மம். வளைந்து வளைந்து போகிற சர்ப்பத்துக்கு நிகர் சக்தி. ஆக பிரம்மம் என்றும் சக்தி என்றும் இரண்டு வஸ்துக்கள் இல்லை. ஒரே பொருள் இயங்காத நிலையிலும், இயங்குகிற நிலையிலும் இருக்கிறது. இது சாத்தியப்படுமா என்னும் ஐயம் எழுகிறது. சமுத்திரத்தின் மேல் பகுதி எண்ணிறந்த அலைகளாக வடிவெடுத்து உருண்

டோடுகிறது. அதே சமுத்திரத்தின் அடிப் பகுதி அசைவற்று இருக்கிறது. சமுத்திரத்திற்கு அது சாத்தியமாயிருப்பது போன்று பிரம்மத்திற்கும் அது சாத்தியமாகிறது. அசையாத நிலையில் அது நிர்குண பிரம்மம். அசைகிற நிலையில் அது சகுண பிரம்மம். நிர்குண பிரம்மம் என்றும், சகுண பிரம்மம் என்றும் இரண்டு பிரம்மங்கள் இல்லை. வேறொரு பாங்கில் பகருமிடத்துச் சிவனுர் சதாசிவமாகவும் அர்த்தநாரீசுவரராகவும் இலங்குகின்றார். அர்த்தநாரீசுவர சொருபத்தில் ஜீவ வியக்தியும் இடம்பெறுகிறது. ஜீவாத்மனைப் பரப்பிரம்மத்துக்குப் புறம்பானதாகக் கருதுவது அக்ஞானம். பரப்பிரம்மத்தின் கூறே ஜீவாத்மனைக் காட்சி கொடுக்கிறது.

இந்த நாமத்தில் ஆத்மசாதகன் அறிந்து கொள்ளவேண்டிய அரியபாடம்ஒன்று அடங்கியிருக்கிறது. சிற்றலை பேரலையாகிய எல்லா அலைகளும் சமுத்திர சொருபமாம். அங்ஙனம் புல் முதல் சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவன் ஈருக ஜீவகோடிகளனைத்தும் பிரம்மத்தின் சொருபங்களாம். இந்த உண்மைக்கு மாருக யார் ஒருவன் தன்னை உயர்ந்தவனுகவும் மற்றவனைத் தாழ்ந்தவனுகவும் பொருள்படுத்துகிருனே அவன் அக்ஞானத்தில் உழல்கின்ருன். ஆத்மீகச் செருக்கு அவனிடத்தில் வளர்ந்துகொண்டிருக்கிறது. தன்னைமுன்னேற்றமடைபவனுக எண்ணிக்கொண்டிருக்கின்ற அன்னவன் உண்மையில் படிப்படியாகக் கீழ்மையுற்று வருகிருன். பேத புத்தியை உண்டுபண்ணுவது அக்ஞானமென்றும்,அபேத புத்தியை உண்டுபண்ணுவது ஞானம் என்றும் பரமஹம்சதேவர் பகர்ந்துள்ளார். ஆதலால் கட்புலனுகின்ற ஜீவகோடிகளனைத்தையும்பரப்பிரம்ம சொருபமாகப் பாவிப்பது நல்ல ஆத்ம சாதனம் என்னும் கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது.

*673. ப்ருஹதீ ப்ருஹதீ* — பெரியவள் என்பது இதன் பொருள்.

பரவஸ்துவுக்கு வாய்த்துள்ள பலவிதமான விளக்கங்களில் அணோரணுமகதோர் மகத் என்ற சுருதி வாக்கியம் ஒன்று. மெய்ப்பொருள் ஆனது அணுவுக்கு அணுவாயும் அப்பாலுக்கு அப்பாலாயும் இருக்கிறது என்பது இந்த மறைமொழியின் கருத்து. அப்பாலுக்கும் அப்பாலாயிருப்பதன் கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது. மனதை அகண்டாகாரத்தில் எடுத்துச் செல்வது சிறந்ததொரு ஆத்ம சாதனமாகிறது. அதற்குற்ற துணையாக இயற்கையின்கண் உள்ள மூன்று பாங்குகளை ஆத்ம சாதகன் தியானித்துப் பழகவேண்டும் என்று பரமஹம்சதேவர் பகர்ந்துள்ளார். வானளாவிக்கொண்டிருக்கும் ஹிமாசலத்தைப் பார்த்து வியப்படைந்து இருப்பது ஒருவித தியானமாகிறது. பிருதிவி அல்லது மண்ணினுடைய கூறு மலை. அது இவ்வளவு பெரியதாக இருக்கிறதாவென்று கண்டு களித்திருப்பது தியானம்.அதன் வாயிலாகச் சிந்தனை சக்தி விரிவடைகிறது. கரைகாணுத கடலைக் கண்டு அதில் மனதைச் செலுத்திப் பழகுவது ஒரு நல்ல ஆத்மசாதனமாகிறது. படிப்படியாகப் பெரியதில் பெரியதின்கண் மனது பாய்ந்து பழகுகிறது. மூன்ருவதாக நள்ளிரவில் உயர்ந்ததோர் இடத்தில் அமர்ந்துகொண்டு நாலா பக்கமும் மேலே வியாபித்துள்ள வானவெளியின்கண் கருத்தைச் செலுத்திப் பழகவேண்டும். அதில் தென்படுகின்ற நட்சத்திரங்கள் எத்தனை எத்தனை கோடி வெளிச்ச வருஷங்களுக்கு அப்பாலிருக்கின்றனவென்று எண்ணிப்பார்க்கவேண்டும்.

வெளிச்ச வருஷம் என்ருல் என்ன என்பதை அறிந்துகொள்வது அவசியம். பூமிக்கும் சூரியனுக்குமிடையில் ஒன்பது கோடி மைல் இருக்கிறது. சூரியனிடத்துக் கிளம்புகிற கதிர் ஒன்று எட்டு நிமிஷங்களில் பூமியை எட்டுகிறது. பொதுவாக வெளிச்சம் ஒரு நிமிஷத்துக்கு ஒருகோடி மைல் வேகத்திற்குப் போகிறது. அப்படி அது முந்நூற்று அறுபத்தைந்து நாட்களில் பாய்ந்து போகிற தூரம் ஒரு வெளிச்ச வருஷம் எனப்படுகிறது. பிருஹதையாயிருக்கின்ற பராசக்தி தன்னுடைய ஸ்தூல வடிவம் எவ்வளவு பெரியது என்பதை இதன் மூலம் விளக்குகிருள். இதற்குமேல் சூட்சும அமைப்புக்குப்போனல் அது இதைவிடப் பன்மடங்கு பெரியதாக விரிவடைகிறது. ஆக அன்னையை ப்ருஹதையாக எண்ணி வரவர ஆத்மசாதகன் தன்னுடைய ஜீவவியக்தியைக் கடந்து அகண்டத்தில் ஒன்றுபடுகிருன்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (160) நல்லதையும் கெட்டதையும் பாகுபடுத்துவது அறிவுடையோர் செயல். மற்றுக் கீதையில் ஐந்தாவது அத்தியாயம் பதினெட்டாவது சுலோகத்தில் உயர்ந்தவன், தாழ்ந்தவன், நல்லவிலங்கு, கெட்டவிலங்கு ஆகியவைகளைப் பாகுபடுத்தாதவன் ஞானி என்று சொல்லப் பட்டிருக்கிறது. ஒரு பாமரனும், நலம் கேடு ஆகியவைகளைப் பாகுபடுத்துவதில்லை. அப்படியானால் பாமரனுக்கும், பண்டிதனுக்கும் வித்தியாசம் ஏது?

சில செயல்கள் வெளித்தோற்றத்தில் ஒரே பாங்குடையவைகளாகத் தென்படுகின்றன. ஆனால் அவைகளுக்கு முகாமையாயிருக்கிற அடிப்படைக் கோட்பாடுகள் ஒன்றோடொன்று சம்பந்தப்படாதவைகளாம். சான்றுகள் சில எடுத்துக்கொள்ளுவோம். புத்தர் பெம்மான் பிக்ஷை ஏற்று உண்டு வாழ்ந்து வந்தார். அதே காலத்தில் கிட்டத்தட்ட அவருக்கு அருகிலேயே வறியன் ஒருவன் ஐயம் ஏற்று வாழ்ந்து வந்தான். வெளித்தோற்றத்தில் செயல்கள் ஒரே தரத்தில் இருக்கின்றன. மன அமைப்பில் வேற்றுமை இருக்கிறது. இப்பிரபஞ்சத்தில் தனக்குச் சொந்தமானது ஒன்றுமில்லை என்பதைத் தெளிந்த ஞானத்தைக்கொண்டு புத்தர் வெளிப்படுத்தினர். வறியனே இவ்வுலகில் தனக்குச் சொந்தமானது ஒன்றுமில்லை என்பதை அறியாமையைக்கொண்டு வெளிப்படுத்தினன். இவ்விரு மன அமைப்புக்கள் ஒன்றோடொன்று ஒன்றுபடமாட்டா.

சிறு குழந்தை யொன்று நாகசர்ப்பத்தோடு விளையாடுகிற சம்பவங்கள் ஏதோ சில சமயங்களில் நேருகின்றன. மகாத்மா காந்தி தமது ஆஸ்ரமத்தில் பாடம் நடத்திக்கொண்டிருந்தபொழுது பாம்பு ஒன்று அவர்மீது ஊர்ந்து சென்றது. அதன் போக்கில் அவர் அதை விட்டுவிட்டார். வெளித்தோற்றத்தில் இச்செயல்கள் ஒரே பாங்குடையவைகளாகத் தென்படுகின்றன. ஆனால் குழந்தையொன்று பெரியதான பிறகு பாம்போடு விளையாடாது. பயந்துகொண்டு எட்டப்போய்விடும். குழந்தையினிடத்துத் தாற்காலிகமாக அபேத மனநிலை யிருந்தது. அதனால் பாம்பு அதனோடு விளையாடிற்று. ஆனால் ஞானத்தை எட்டிய மகாத்மா அபேதத்தில் ஆழ்ந்து ஊறியிருந்தார். ஆதலால் பாம்புக்கும் அவருக்கும் பிணக்கு ஏற்படவில்லை. பண்பில் அவர் முதிர்ச்சியடைந்திருந்தார். பண்பு இன்னது என்று அறியாத நிலையில் குழந்தை இருந்தது. பண்பட்டு அபேத நிலையை எட்டுவது அக்குழந்தைக்கும் குறிக்கோளாகிறது.

கொலைபாதகனொருவன் புற மதத்தைச் சார்ந்த குழந்தையொன்றைத் தூக்கி மேலே வீசி வாளால் வெட்ட ஓடிவருகிறான். அவனது நோக்கத்தை அறியாத குழந்தை சிரித்துக்கொண்டு அவன் அருகில் ஓடுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் நிகழ்ந்த சிப்பாய்க் கலகத்தின்பொழுது சாது ஒருவரை முரடன் ஒருவன் கத்தியால் ஓங்கிக் குத்தினன். கீழே வீழ்வதற்கு முன்பு ''குத்துபவனும், குத்தப்படுபவனும் ஒன்றே'' என்று இயம்பிக்கொண்டு அவர் உயிர்விட்டார். மனநிலையில் உச்சநிலையில் இருப்பவர்களும் விவேகமே ஒன்றும் இல்லாதவர்களும் ஒரே பாங்கு உடையவர்கள் போன்று தென்படுகிறார்கள். வடதுருவத்துக்கும் தென்துருவத்துக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரம் அவர்களுக்கிடையில் மன பரிபாகமிருக்கிறது. உலக நடைமுறையில் வைத்துப் பார்க்கிறவிடத்துப் பண்பும் பணிவும் நிறைந்துள்ள பிராமணன் ஒருவனை மேலோனாகப் போற்றியாகவேண்டும். சீலமறியாத புலையனைக் கீழோனாகக் கருதியே ஆகவேண்டும். பசுவைக் கோமாதாவாகவும், யானையைக் கணநாதனுக்கு நிகராகவும் கருத நாம் கடமைப்பட்டிருக்கிறோம். மலத்தைத் தின்று வாழும் நாயை அருகில் வரவொட்டாது விரட்டி ஓட்டவும் நாம் கடமைப்பட்டிருக்கிறோம். வேற்றுமை நிறைந்துள்ள இவ்வுயிர்வகைகளுள் வேற்றுமை காணாத மேல்நிலையை நிறை ஞானி எட்டியிருக்கிறான். ஆதலால் நிறை ஞானியின் முன்னிலையில் வெவ்வேறு வகைப்பட்ட உயிர்வகைகளும் தங்களிடத்துள்ள கீழ்மைகளை மறந்துவிடுகின்றன. தாற்காலிகமாக ஞானியின் முன்னிலையில் அவைகளுக்கிடையிலும் அபேத புத்தி அமைகிறது.

அபேதத்தை எட்டுவது நம்முடைய வாழ்க்கையின் குறிக்கோள். ஆனல் அபேதத்தை எட்டுவதற்கு முன்பு அதை எட்டியிருப்பதாக நாம் பாசாங்கு பண்ணலாகாது. உலகத்தவர்கள் உலக நடைமுறையை அனுஷ்டித்து வருவதற்கிடையில் அவை யாவையும் கடந்து அபேத நிலையை எட்டுவது வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இதுவே இந்தச் சுலோகத்தின் உட்கருத்தாம்.

கேள்வி: (161) *மறுபிறப்பு உண்டு அல்லது இல்லை என்பதை எவ்வாறு நிருபிக்க முடியும்?*

மனிதனுக்கு ஒரே பிறப்புத்தான் உள்ளது என்று கிறிஸ்துவ மதம் பகருகிறது. ஆனல் இந்துமதக் கோட்பாட்டுப் பிரகாரம் சிற்றுயிர்கள் பலகோடிப் பிறவிகளில் சிறிது சிறிதாகப் பண்பட்டுப் படிப்படியாக மேலான பிறவிகள் எடுத்துப் பிறகு மானுட நிலையை எட்டுகின்றன. ஆதலால் ஜீவாத்மா ஒருவனுக்குப் பிறவிகள் எண்ணிக்கையில் அடங்கா என்பது இந்து மதக்கோட்பாடு. இவ்விரண்டு விதக் கொள்கைகளுள் எது தப்பு எது சரியென்று எதைப் பிரமாணமாக வைத்து நிர்ணயிப்பது என்பது கேள்வி.

மனிதனுக்குப் பிறவி ஒன்றுதான் உள்ளது என்னும் கோட்பாட்டை யுக்தி பூர்வமாக ஆராய்வோம். பிறப்பெடுக்கிற மானுடப் பிண்டம் ஒன்று அன்றே சாகலாம், அல்லது என்று வேண்டுமென்றாலும் சாகலாம். சிறுவன் ஒருவன் வாழ்க்கைத் தத்துவம் எதையும் அறிந்து கொள்ளுவதற்கு முன்பே மடிந்து போகிறான். செவிடனும், குருடனும் உலக நடைமுறைகளை முற்றிலும் அறிந்துகொள்ளாது வாழ்வை முடிவுக்குக் கொண்டு வருகிறார்கள். இத்தகைய ஜீவர்களுக்குக் கிறிஸ்துவக் கடவுள் எத்தகைய கதியைக்கொடுப்பார்? மனிதனுக்கு ஒரே பிறவியைக் கொடுக்கிற அந்தக் கடவுள் ஏதோ ஒரு காலத்தில் செத்தவர்களை எழுப்பித் தீர்ப்புக்கொடுக்கிறார். நல்லவர்களைச் சொர்க்கத்திற்கும் கெட்டவர்களை நரகத்திற்கும் அவர் அனுப்புகிறார். ஈண்டு இயம்பியுள்ள குறைநிலையிலுள்ள மக்களை அவர் என்ன செய்வார்? கிறிஸ்துவர்களிடமிருந்து இதற்கு விடை கிடையாது.

ஹிந்து மதத்தின் தத்துவஆராய்ச்சி இயற்கையின் நடைமுறைக்கு ஒத்திருக்கிறது. பரம்பொருள் என்பது பேருயிர். அந்தப் பேருயிர் என்னும் பரவஸ்துவினின்று உயிர் வகைகள்தோன்றி படிப்படியாகப் பரிணமித்து மேல் நிலைக்கு வருகின்றன. ஆதலால் ஜீவ கோடிகளனைத்தும் பரவஸ்துவோடு சம்பந்தப்பட்டவைகள். அலைகளனைத்தும் கடலை ஆதாரமாகக் கொண்டிருப்பதற்கு நிகராக ஜீவ கோடிகளனைத்தும் பரவஸ்துவை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. வாழ்க்கை நடைமுறையில் உயிர்களனைத்துக்கும் தொடர்பு உண்டு. மடிந்து போவதை எந்த உயிரும் விரும்புவதில்லை. ஆதலால்தான் உயிர்களனைத்துக்கும் மரணபயம் பொதுவானது. முன்பு பலதடவைகள் மரணத்தை அனுபவித்திருப்பதால் உயிர்கள் மரணத்தைக் குறித்துப் பயப்படுகின்றன. பல பிறவிகள் இருப்பதற்கு மரணபயம் ஒரு சான்று. அடுத்தபடியாகக் காலிமனதோடு எந்த ஜீவனும் பிறப்பெடுப்பதில்லை. ஒரு பிறவிதான் என்றால் உயிர்களுக்கிடையில் தென்படும் உயர்வுதாழ்வுக்குக் காரணம் கண்டு பிடிக்கமுடியாது. இப்பொழுது அமைந்துள்ள வாழ்க்கையில் ஒருநாளில் பெறுகிற அனுபவம் அடுத்த நாளுக்குத் தொடர்வதுபோன்று ஒரு பிறவியின் அனுபவம் மறுபிறவிக்குத் தொடர்கிறது. பூர்வ ஜன்மாந்திர வாசனை அந்தந்த ஜீவனுடைய மனதில் புதைந்து கிடக்கிறது. தொடர்ந்து வரும் பிறவிகளில் பழைய ஜன்மக் கூறுகளைத் தோற்றத்துக்குக் கொண்டுவருவதே வாழ்க்கையின் நோக்கமாகிறது. நீண்ட ஆயுள், குறுகிய ஆயுள் ஆகியவைகள் கடவுளால் கொடுக்கப்பட்டவைகள் அல்ல. பழவினைப்பயனாகப் புதிய பிறவியின் கால வரையறை அமைகிறது. இங்ஙனம் படிப்படியாகப் பல பிறவிகளில் பண்பாடடைந்து ஜீவாத்மாக்கள் பழையபடி பரத்தைச் சென்றடைகின்றன. இது யுக்திக்கு ஒத்தது. இயற்கையின் நடைமுறை இதற்குச் சான்றாக இருக்கிறது. ஆனல் கிறிஸ்துவக் கொள்கையாகிய ஒரே பிறவி என்பது பொருளற்றது. சிறுபிள்ளைகளின் கற்பனைபோன்று அது தென்படுகின்றது. தத்துவத்துக்கு ஒருபிறவிக்கொள்கை ஒவ்வாதது.

# இன்பம் எங்கே இருக்கிறது ?

( சுவாமி ஆத்மானந்தர் )

வையக வாழ்வு இன்ப துன்பம் நிறைந்தது. உலக வாழ்வில் இன்ப துன்பத்தை அனுபவிக்காத உயிரில்லை. வாழ்வில் இன்ப துன்பம் மாறி மாறி வந்து உயிர்களைச் சார்கின்றன. இன்பத்தை விரும்புவதும் துன்பத்தைப் புறக்கணிப்பதும் உயிர்களின் இயல்பு. இதற்கு மனிதன் மட்டும் விதிவிலக்கன்று. இன்பதுன்பம் இரண்டையும் மிகுதியாக அனுபவிக்கின்றவன் மனிதன்தான். சிற்றுயிர்களின் இன்ப துன்பம் புறப்புலன்களோடு நின்றுவிடுகின்றன. புலனின்பத்தைத்தவிர அவைகள் பிறிதோரின்பத்தை அறியமாட்டா. உடலுக்கு வரும் துன்பத்தைத் தவிர அவைகள் வேறு துன்பத்தை அறியா. ஆனால் மனிதனின் நிலை அத்தகையதன்று. அறிவு வளர்ச்சியும், மன வளர்ச்சியும் அடையப்பெற்றவன் மனிதன். இன்பதுன்பத்தைப் புறக்கரணங்களால் மட்டுமல்லாது அந்தக்கரணங்களாலும் அனுபவிக்க வல்லவன் மனிதன். புறக்கரணங்களைவிட நுண்ணியவைகளாய் இருப்பன அந்தக்கரணங்கள். உடலுக்குவரும் பிணியைவிட மனதிற்கு வரும் பிணி அதிகத் தொல்லையைத் தருவதாகும். உடற்பிணியினால் ஏற்புடும் அவஸ்தையை உடல் துன்பம் என்றும், உளப்பிணியினால் ஏற்படும் அவஸ்தையை மனத் துயரம் என்றும் கூறலாம். உடற்பிணியின்றியே ஒருவன் உளப்பிணிக்கு உரியனாகலாம். கொடியதிற் கொடியது மனநோய். உடல் உள்ளம் இரண்டையும் நோய்க்கு உள்ளாக்காது மனிதன் பாதுகாத்தல் வேண்டும். "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பது கோட்பாடு. மனிதன் துன்ப துயரங்களுக்கு உள்ளாகாத வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். முறையான வாழ்க்கை வாழ்வதன்மூலம் உடல் உள்ளம் இரண்டையும் நோய்க்குட்படுத்தாது வாழ்க்கை நடத்தலாம்.

நம்முடைய அறியாமையே நமக்குத் துன்பத்தைத் தருகின்றது. அறியாமையினால் மாந்தர் குற்றங்கள் பல புரிகின்றனர். தீவினையில் ஈடுபடுவதும், நன்னெறியைப் புறக்கணிப்பதும் அறியாமையினாலேயாம். தீவினை துன்பத்தையும், நல்வினை இன்பத்தையும் நல்குகின்றன. நல்வினை தீவினை இரண்டுமே மனிதனைப் பந்தத்தில் ஆழ்த்தவல்லவை. தீவினையை இரும்பு விலங்கினோடும், நல்வினையைப் பொன் விலங்கினோடும் ஒப்பிடலாம். இரும்பு விலங்காயினும் பொன்விலங்காயினும் இரண்டுமே மனிதனைத் தளைக்க வல்லவை என்பதை அறியவேண்டும். ஆதலால், நல்வினை தீவினை ஆகிய இருமைகளினின்றும் மனிதன் விடுபடவேண்டும். பந்த பாசங்களிலிருந்து விடுபடுதற்கு அதுவே உற்ற உபாயமாகும். வினைப்பயன்தான் நமக்கு இந்தத் தேகத்தைத் தந்து துன்ப துயரங்களையும் தருகின்றது. விடுதலை பெறவிரும்புவோன் வினைப்பயனைத் துறக்கவேண்டும். போகத்துக்குரிய வினைகளை யோகத்துக்குரிய வினைகளாக்கவேண்டும். போக வாழ்வை யோக வாழ்வாக மாற்றியமைக்கவேண்டும். அருள் நாட்டம் நமது வாழ்வைத் திருத்தியமைக்கிறது. அந்தக்கரணம் புறக்கரணம் அனைத்தையும் அது அடியோடு மாற்றியமைத்துவிடுகிறது. மனத்தகத்துத் தெய்வபக்தி ஓங்க ஓங்க மனிதனிடத்துச் சுயநலம் தேய்கிறது. உலகப்பற்றுக் குறைந்து தெய்வப்பற்றுப் பெருகுகிறது. கடவுள் நாட்டம் அதிகரிப்பதற்கேற்ப அகங்கார மமகாரங்கள் தேய்கின்றன. அகங்கார மமகாரங்கள் அகலப்பெற்றவனிடத்து ஜீவபோதம் தேய்ந்து பரபோதம் தலையெடுக்கிறது. பரபோதம் தலையெடுக்கப்பெற்றவன் தன்னை முற்றிலும் பரம்பொருளினிடத்து ஒப்படைத்து விடுகிறான். இறைவனிடத்து அடைக்கலம் புகுந்தவன் வினைத்தளைகள் அனைத்தினின்றும் விடுபடுகின்றான்.

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனூர்க்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே

என்பது அப்பர் திருவாக்கு.

மனிதனை வினைத்தளைகள் பல்வேறு வடிவங்களில் வந்து தளைக்கும். துன்ப துயரங்களும் பல்வேறு ரூபங்களில் வந்து தாக்கும். எந்த

ருபத்தில் வந்து தாக்கினும் வினையின் தாக்குதலினின்று பக்தன் விடுபடுகின்றான். இறைவன் தன்னைச் சார்ந்து நிற்பாரை வினைத் தளைகளினின்று விடுவிக்கின்றான். துன்ப துயரங்களற்ற பேரின்பவாழ்வு பக்தனுக்குக் கிட்டுகிறது. வினைத்தளைக்கு விளைநிலமாய் இருப்பது மனம். செழுமையான விளைநிலம் போன்றது மனம். நல்வினை தீவினை எதை விதைத்தாலும் அதை நன்கு வளரச் செய்வது மனத்தின் இயல்பு. மனிதன் தன்னுடைய வினையைத் திருத்தியமைக்கவேண்டும். தனக்கென்று செய்கின்ற கர்மங்களை இறைவனுக்குரியதாக்கவேண்டும். சுயநலத்தோடு செய்கின்ற கர்மம் நம்மைப் பந்தப்படுத்தும். பரமனுக்கென்று புரிகின்ற கர்மம் நம்மைப் பந்தத்தினின்று விடுவிக்கும். மனம் மொழி மெய்யால் செய்கின்ற கர்மங்களையெல்லாம் இறைவனுக்குரியவை ஆக்குமிடத்து அது சதாகால பூஜையாகின்றது. யாண்டும் தெய்வச் சிந்தையிலேயே ஊறியிருப்பது ஒப்பற்ற தேவாராதனையாகிறது. துன்ப துயரங்கள் அனைத்தினின்றும் விடுபடுதற்கு யாண்டும் தெய்வச் சிந்தனையில் ஊறியிருத்தலே உற்ற உபாயமாகும். இரவு பகல் மாறி மாறி வருவது போன்று மனித வாழ்வில் துன்ப இன்பங்களும் மாறி மாறி வருகின்றன. உலகில் யாண்டும் இன்புற்றிருப்போரைக் காணுதல் அரிதினும் அரிதேயாகும். மிகப் பெரிய செல்வந்தனுக்கும் தொல்லைகள் பல இருக்கத்தான் செய்கின்றன. அவ்வாறெனின் துன்பமற்ற பெரு வாழ்வு கிட்டவே கிட்டாதா? இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று கூறுகின்ற பேரின்பவாழ்வு யாருக்குமே கிட்டாதா? என்ற வினாக்கள் எழலாம். அருளாளர்களின் கூற்றுக்கள் இவ்வினாக்களுக்கு விடை பகர்கின்றன. துன்ப துயரமற்ற பேரின்ப வாழ்வைப் பெறுதற்கு அப்பர் பெருமகனார் வழிகாட்டுகிறார்:

"துன்ப மின்றித் துயரின்றி என்றும்நீர்
இன்பம் வேண்டில் இராப்பகல் ஏத்துமின்
என்பொன் ஈசன் இறைவனென்று
உள்குவார்க்கு
அன்பனாயிடும் ஆனைக்கா அண்ணலே".

ஈசற்கு நாம் அன்பராகவேண்டும். மெய்யன்பினோடு அவனை நினைக்கவேண்டும். அன்புதான் முக்கியம். பூஜைக்குரிய ஆராதனைப் பொருட்களுள் அன்பிற்கு நிகரானது வேறெதுவுமில்லை. அன்பினோடு நினைப்பவர் மனத்தைக் கோயிலாக் கொள்பவன் இறைவன். உயிர்கள் அனைத்திடத்தும் அன்பு இருக்கின்றது. ஏனையவுயிர்களைவிட மனிதனிடத்து அன்பு மிகுதியாக இருக்கின்றது. மனத்தகத்துள்ள அன்பை மேலும் மேலும் வளர்ப்பதற்கேற்ற வாய்ப்பு மனிதவர்க்கத்துக்குண்டு. மனிதன் எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்த இயலும். ஆனால் ஏனைய உயிர்களுக்கு அந்த வாய்ப்பில்லை. அடிக்கின்ற கைக்கும் உதைக்கின்ற காலுக்கும் முத்தமிடும் உயர்நிலையை அடைய மனிதனால் இயலும். இன்னா செய்தார்க்கும் இனியது செய்யும் பெருநிலையை எய்த மனிதனுக்கு இயலும். ஆனால் ஏனையவுயிர்கள் இந்த உயர்நிலையை அடைய இயலாது. மனத்தகத்துள்ள அன்பை மேலும் மேலும் வளர்க்க வேண்டும். உயிர்கள் அனைத்திடத்தும் அன்பு செலுத்த வேண்டும். நம்மை நாம் நேசிப்பது போன்று உயிர்களனைத்தையும் நேசிக்க வேண்டும். அத்தகைய அன்பைத் தருமாறு இறைவனிடத்துப் பிரார்த்திக்க வேண்டும்.

"எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி
யிரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"

என்பது தாயுமானவரது பிரார்த்தனையாகும். எவ்வுயிரையும் தன்னுயிர்போல் எண்ணி அன்பு செலுத்துவோரைத்தான் இன்பத்தபோதனர் எனல் வேண்டும். அடியார் வேடம் பூண்டு உயிர்க்கின்னா செய்யலாகாது. வழிபாட்டில் வஞ்சகமென்பது கூடாது. அடியார் வேடம் பூண்ட அன்பகத்தில்லா வன்நெஞ்சரது வணக்கத்தை இறைவன் ஏற்றுக்கொள்ளான்.

அன்பு வேறு பற்றுதல் வேறு என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். உற்றார் உறவினரிடத்து வைக்கின்ற பற்றுதலை அன்பு என்று பிழைபடப் பொருள்படுத்தலாகாது. அன்பு யாண்டும் இன்பத்தைத் தருவது. அது ஒருபோதும் துன்பத்தைத் தராது. அன்பில் போட்டிக்கோ பொறாமைக்கோ இடமில்லை. அன்பு கைம்மாறு கருதுவதில்லை. தியாகம் தான் அன்புக்கு அடிப்படையாய் இருப்பது.

அன்பு தன்னிடத்துள்ள எல்லாவற்றையும் தியாகம் செய்கின்றது. தியாகம் தியாகம் தியாகம் என்பதுதான் அன்பின் முடிந்தநிலை. பக்தன் தான் வழிபடுகின்ற தெய்வத்துக்குத் தன்னிடத்துள்ள அனைத்தையும் கொடுத்து விடுகின்றான். இறுதியில் தன்னையே தந்து விடுகின்றான். தன்னிடத்துள்ள அனைத்தையும் கொடுத்து, இறுதியில் தன்னையும் கொடுத்து ஈசனைத் தனக்குக் கடன்காரனுக்கிவிடுகின்றான். ஈசனைக் கடனாளியாக்கும் வல்லமை வேறு எதற்கும் இல்லை. அன்பு ஒன்றுக்குத் தான் உண்டு. ஆதலால் ஈசனிடத்து அன்பு செலுத்த வேண்டும். இடைவிடாது அன்பு செலுத்தவேண்டும். காலையும் மாலையும் பிரார்த்தனை வேளைகளில் மட்டுமல்லாது யாண்டும் அன்பு செலுத்துதல் வேண்டும். இராப்பகல் என்று பாராது இடையிடின்றி ஏத்துவார்க்கும்; ஓயாது உள்ளன்பினோடு உள்குவார்க்கும்தான் இறைவன் அகப்படுவான். அத்தகைய அன்பரைக் காக்க அவன் யாண்டும் அருகிலிருப்பான். "உருகி நைபவர்க்கூனமொன்றின்றியே அருகு நின்றிடும் ஆனைக்கா அண்ணலாக" இருப்பவன் இறைவன் என்கின்றார் அப்பர் பெருமான்.

மனித வாழ்வில் எத்தனையோ துன்ப துயரங்களுக்கு உள்ளாகின்றோம். துன்ப துயரங்களுக்குப் பந்தபாசம்தான் காரணமாகும். பந்தபாசம் பெருகப் பெருகத் துன்ப துயரங்களும் பெருகிக்கொண்டே போகும். பந்தபாசம் குறையக் குறையத் துன்ப துயரங்களும் குறைந்து கொண்டே வரும். பந்தபாசம் அடியோடு அழியுமிடத்து நமக்கு வீடுபேறு வந்து வாய்க்கிறது. பந்தபாசத்தை வேரறுப்பது தான் ஆன்மீக வாழ்வின் முக்கிய நோக்கம். பந்தபாச வலை மிகவும் வலியது. அதில் நாம் அனைவரும் கட்டுண்டு கிடக்கின்றோம். அதிலிருந்து நாம் விடுபடல் வேண்டும். அதனை அறுப்பது எளிதான காரியமன்று. ஈசனது துணையின்றிப் பாசவலையை அறுத்தல் இயலாது. எத்துணையோ ஜன்மாந்திரங்களாகப் பின்னிய வலை அது. நமக்கு நாமே ஏற்படுத்திக்கொண்ட வலை அது. சிலந்திப்பூச்சி தான் கட்டிய வலையில் தானே அடைப்பட்டுக் கிடக்கின்றது. இறுதியில் அதனைப் பிய்த்தெறிந்து விட்டு வெளியே வருகின்றது. சிலந்திப்பூச்சியின் வலிவு கூட நமக்கில்லை. நாம் கட்டிய வலையை நம்மால் பிய்த்தெறிய இயலுவதில்லை. மேலும் மேலும் பந்தபாசமாம் வலையைப் பின்னிக்கொண்டே போகிறோமே யொழிய அதை நிறுத்தவோ அறுத்தெறியவோ நினைப்பதில்லை. பாசவலையை வேரோடு பறிக்க ஈசனது துணையை நாடவேண்டும். அவனுக்குத்தான் அதை அறுக்கும் வலிவுண்டு. எமன் வீசுகின்ற பாசத்தையே அறுக்கவல்லவன் ஈசன். நமக்கு நாமுண்டாக்கிய பாசத்தை வேரறுப்பதற்கு ஈசனை அன்பினோடு நினைந்து நித்தமும் வழுத்துதல் ஒன்றே உற்ற உபாயமாகும்.

"பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே
பரஞ்சோதி பண்டரங்கா பாவ நாசா
தேசத் தொளிவிளக்கே தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட் டான வென்றும்
நேசத்தை நீ பெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலுஞ் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோ ரேறே யென்றும்
எம்பெருமா னென்றென்றே யேத்தா நில்லே"

என்பது அப்பர் பெருமானர் திருவாக்கு.

ஈசனுக்கும் நமக்கும் இடையிலுள்ள இணக்கம் பிரிக்கமுடியாதது. ஆயினும் பந்த பாசம் நம்மையும் ஈசனையும் பிரிக்கும் தடையாய் இருக்கின்றது. நமக்கும் ஈசனுக்கும் இடையிலுள்ள இணக்கத்தை மறைக்கும் திரை நம்மிடத்துள்ள பாசம்தான். பாசத்திரைதான் ஈசனை மறக்கும்படியும், உடற்பற்றை வளர்க்கும்படியும் செய்கிறது. உடலை மெய்யென்று கருதுவது மயக்கம். நாம் அனைவரும் மயக்கத்துக்கு உட்பட்டிருக்கின்றோம். மெய்யறிவு நீங்கப்பெற்ற நாம் பொய்யான உடலை மெய் யென்று கருதுகின்றோம். இந்த ஊனுடலை ஓம்புதல்தான் உண்மை வாழ்வு என்று கருதுகின்றோம். உடல் அழிவை நம்முடைய அழிவாக எண்ணுகின்றோம். உலகத்துப் பொருட்கள் அனைத்தையும் விட ஊனுடலினிடத்துத்தான் மிகுந்த பற்றுதல் வைத்திருக்கின்றோம். நம்மை நாம் நேசிப்பதுபோல் பிறரை நேசிப்பதில்லை. நம்முடைய அன்பு முழுதையும் உடலினிடத்தும், உடலினுள் இருக்கும் உயிரினிடத்துமே செலுத்துகின்றோம். உயிர்ப்பற்று எல்லா

வுயிர்களிடத்தும் குடிகொண்டிருக்கின்றது. இதற்கு எந்தவுயிரும் விலக்கன்று. நமக்கு இனிமையானவர் நாமே. நம்மைவிட நமக்கு இனிய பொருள் வேறொன்றில்லை. இதை எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆயினும் நம்மினும் இனியபொருள் ஒன்றுண்டு. அதுதான் ஈசன். உடலுக்குள் உயிர் இருக்கின்றது. உடலினை இயங்கச்செய்வது உயிர். உடலின்றி உயிர் தன்னை விளக்கிக் காட்ட இயலாது. உடலின் இயக்கத்தைக்கொண்டு தான் உயிரின் இருப்பை உணருகின்றோம். ஆனால் உயிருக்கும் உயிராய் ஒருபொருள் இருக்கின்றது. அதை நாம் அறிவதில்லை. அதைத்தான் ஈசன் என்று ஆன்றோர் கூறுகின்றனர். நாம் புறத்தோற்றத்தைத்தான் பார்க்கிறோம். உயிர்களின் ஊனுடல்களைத்தான் பார்க்கிறோம். ஊனுடலின் அசைவைக்கொண்டு உயிரின் இருப்பை உணருகின்றோம். ஆனால் அனுபூதிமான்கள் ஊனுடலைப் பார்ப்பதோடு நின்றுவிடுவதில்லை. ஊனுடலுக்கு ஆதாரமாய் இருக்கின்ற உயிரைப் பார்க்கின்றனர். அது மட்டுமன்று. அந்த உயிருக்கே உயிராய் இருக்கின்ற ஈசனைத் தங்கள் ஞானக்கண்களால் காணுகின்றனர். அந்த ஈசனது அருளால்தான் உயிர்களனைத்துமே வாழ்ந்து வருகின்றன. ''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்றனர் ஆன்றோர். உடலைவிட உயிர் இனியது. உயிரைவிட உயிர்க்குயிராய் இருக்கின்ற இறைவன் இனியவன். இந்த உண்மையை உணரவேண்டும். இந்த உண்மையை உணருகின்ற அளவுதான் நாம் ஈசனிடத்து அன்பு செலுத்துவோம்.

ஈசனை நேசிப்பதனால் நாம் பெறுகின்ற ஆனந்தமோ அளவிடற்கரியது. உலகம் தருகின்ற ஆனந்தத்திற்கு ஆதியும் அந்தமும் உண்டு. உலகப் பொருட்களனைத்தும் ஆதியும் அந்தமும் உடையவை. ஆனால் ஈசனே ஆதியும் அந்தமும்இல்லா அரும்பெருஞ்ஜோதியாவான். அவனிடத்து அன்பு செலுத்துவதனால் அடைகின்ற ஆனந்தமும் ஆதியும் அந்தமும் அற்றதாகும். அகண்டாகார சிவபோகமெனும் பேரின்ப வெள்ளத்தில் திளைத்தவர்கள் பெறுகின்ற பேரானந்தத்தை எதனோடு ஒப்பிட்டுக் காட்டுவது? அந்தப் பேரானந்தத்தை உலகப் பொருட்கள் எதனோடும் ஒப்பிட இயலாது.

உயிர்கள் அனைத்தும் சிற்றின்பத்தில் நாட்டமுடையவைகளாய் இருக்கின்றன. மக்களுள் பெரும்பாலோர் சிற்றின்பத்தை அனுபவிப்பது தான் வாழ்க்கையின் லக்ஷியம் என்று கருதுகின்றனர். சிற்றின்பத்தினோடு இறையின்பத்தை ஒப்பிடலாமா? கூடாது என்கின்றனர் ஆன்றோர். பட்டம் பதவிகளைப் பெறுதலில் மனிதனுக்கு மிகுந்த ஆசை. மனிதனுடைய பதவி ஆசைக்கு அளவென்பதே இல்லை. பதவிகளிலெல்லாம் மிகவுயர்ந்தது தனி முடி கவித்தாளும் அரச பதவி. உலகனைத்தையும் ஒரு குடைக்கீழ் ஆளுகின்ற ஏகச்சக்ராதிபதியாக இருப்பதில் மனிதன் மிகுந்த ஆனந்தத்தைக் காணுகின்றான். அந்தச் சக்ராதிபத்திய ஆனந்தத்தோடு இறையின்பத்தை இணைத்து வைத்துப் பேசலாமா? மேற்கூறிய எதனோடும் இறையின்பத்தை ஒப்பிட்டுப் பேசலாகாது. பூவுலகம் தருகின்ற எந்த இன்பத்தினோடும் இறையின்பத்தைஒப்பிடலாகாது. இந்திரபதவி தருகின்ற இன்பமும், பிரம்ம பதவி தருகின்ற இன்பமும்கூட இறையின்பத்திற்கு ஒப்பிடுதற்குரியதன்று. மண்ணுலக இன்பமும் விண்ணுலக இன்பமும் அந்தக்கரணங்களாலும் புறக்கரணங்களாலும் அனுபவிக்கக் கூடியவை. ஆனால் இறையின்பமோ மனாதீதத்தில் அனுபவிக்கக்கூடியது. இதை அப்பரடிகள்

''கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழல் பாவைநல் லாரினும்
தனிமு டிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே''

என்று தம்முடைய திருவாக்கால் எடுத்துக் காட்டுகின்றார். இன்பம் எங்கே இருக்கின்றது? அது புலன்களிலோ, பட்டம் பதவிகளிலோ, மாடமாளிகை கூடகோபுரத்திலோ, அறுசுவை உணவிலோ, ஆணிலோ பெண்ணிலோ, இவை ஒன்றிலோ, யாவற்றிலுமோ இல்லை. அது ஈசனிடத்து மட்டுமே இருக்கின்றது. ஈசனை அடைந்தோர்தாம் இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று இருக்க இயலும். ஈசனை அடைந்தோர்தாம் எல்லையற்ற பேரானந்தத்தில் என்ஞான்றும் திளைத்திருக்க முடியும்.

''பேச்சுமூச் சில்லாத பேரின்ப வெள்ளமுற்று
நீச்சுநிலை காணமல் நிற்குநாள் எந்நாளோ.''

# வாசுதேவமனன விளக்கம்

( சுவாமி ஸதானந்தர் )

ஆத்மாவுக்கு ஏற்படும் துக்கம் சரீரத்தைப் பெறுவதால் என்றும், சரீரம் ஏற்படுவதற்குக் காரணம் கர்மா என்றும் சொல்லப்பட்டன. புண்ணியம், பாபம், இரண்டின் கலப்பு என்று கர்மத்தை மூன்று வகைப்படுத்தலாம். புண்ணிய பலனால் அடைவது தேவ சரீரம். பாப பலனால் ஏற்படுவது விலங்கு சரீரம். இரண்டும் கலந்ததனால் உண்டாவது மானுட சரீரம். இந்த மூன்றுவிதக் கர்மாக்களிலும் ஒவ்வொன்றிலும் உயர்ந்தது, மத்திமம், சாமான்யம் என்று மூன்று விதங்கள் இருக்கின்றன.

ஹிரண்யகர்ப்பனின் சரீரம் உயர்ந்த புண்ணியகர்மாவினால் ஏற்படுகிறது. மத்திமமான புண்ணிய கர்மாவினால் உண்டாவது இந்திரன் முதலியவர்களின் சரீரங்கள். ராக்ஷசன், யக்ஷன், பிசாசு முதலிய சரீரங்கள் சாமான்ய புண்ய கர்மாவினால் ஏற்படுகின்றன.

பிறருக்குத் துன்பத்தை உண்டுபண்ணும் முள்மரம், விஷவிருக்ஷம், புலி, பாம்பு, தேள், ஆந்தை, கொசு, அட்டை ஆகியவைகளின் சரீரங்கள் கொடிய பாபகர்மாவின் பலனால் உண்டாகின்றன. மா, பலா, வாழை, தென்னை முதலிய மரங்களும், வீட்டில் வசிக்கும் பன்றி, எருமை, கழுதை, ஒட்டகம் முதலியவைகளின் சரீரங்களும் மத்திமமான பாபகர்மாவின் பலனால் உண்டாகின்றன. அரசமரம், துளசி, வில்வம், பசு, குதிரை முதலியவைகளின் சரீரங்கள் சாமான்ய பாபகர்மங்களின் பலன்களினால் ஏற்படுகின்றன.

இந்த மனுஷ்யலோகத்தில் நிஷ்காமியகர்மானுஷ்டானம், சாதன சதுஷ்டயம், சத்குருவை அடைதல், சிரவணம், மனனம் முதலியவைகளின் உதவியால் கிரமமான ஆத்மஞானம் அடைந்து அதன் மூலமாக ஜீவன் முக்தியையும் விதேக முக்தியையும் அடைவதற்கு யோக்கியமாக உள்ள மனுஷ்ய சரீரம் சிரேஷ்டமான மிச்ரகர்மாவின் பலன் ஆகும். தன்னுடைய வர்ணாஸ்ரம தர்மங்களையும், காமிய கர்மாக்களையும் செய்வதற்கு யோக்கியமான சரீரம் மத்திமமான மிச்ர கர்மாவின் பலன் ஆகும். சண்டாளன், கொலை கொள்ளைக்காரன், வேடன், மிலேச்சன் முதலானோர் சரீரங்கள் சாமான்ய மிச்ரகர்மாவின் பலன் ஆகும்.

ஆகையால் புத்திசாலியான மனிதன் மேலே சொன்ன கர்மாவின் பல பேதங்களை நன்கு விசாரித்து அறிந்து இப்பூமியில் மனுஷ்ய ஜன்மத்தில் சிரேஷ்டமான மிச்ரகர்மாவின் பயனை பிறவி கிடைக்கும்படி முயலவேண்டும்; தன் வர்ணாச்ரமங்களுக்கு உசிதமான கர்மாக்களைப் பலனில் ஆசைகொள்ளாமல் ஈசுவரார்ப்பணப் புத்தியுடன் செய்யவேண்டும்.

ஜீவனுக்கு ஏழு விதமான பந்தங்கள் ஏற்படுகின்றன. அவையாவன: 1. துக்கம் 2. பிறவி 3. கர்மம் 4. ராகதுவேஷம் 5. அபிமானம் 6. அவிவேகம் 7. அக்ஞானம் இவைகளில் முந்தியதற்குப் பிந்தியது காரணம் என்று சொல்லப்படுகிறது. ஜீவர்களின் நிலையைப் பற்றிய உண்மை இது. இந்த ஏழு கண்ணிகளை, வளையங்களைக் கொண்ட சங்கிலி ஜீவனை இந்த ஜகத்துடன் பிணைத்து வைத்திருக்கிறது. ஜீவனை முதலில் அக்ஞானம் பீடிக்கிறது. அதன் விளைவாக அவிவேகம் உண்டாகிறது. அவிவேகத்திலிருந்து அபிமானம் பிறக்கிறது. அபிமானத்திலிருந்து ராகதுவேஷங்களும், ராகதுவேஷங்களினால் கர்மபலனும், கர்மபலனினால் பிறவியும், பிறவியினால் துக்கமும் உண்டாகின்றன. நாம் மானுடராகப் பிறந்திருக்கிறோம். ஊழின்வேகத்தினால் நாம் இயக்கப்படுகிறோம். நாம் வெகு பிரயாசை செய்தாலன்றி, கவனமாக இருந்தாலன்றி அதிலிருந்து மீளுதல் துர்லபம். நம் பழவினைப் பயனை நாம் அனுபவித்துத் தீர்க்கிறோம். இந்தப் பந்த சங்கிலியில் கர்ம வளையம் ஸ்தூலமாகத் தெரிகிறது. மற்ற வளையங்கள் சூக்ஷ்மமானவை. அந்தச் சூக்ஷ்மமான பந்தங்களை அறுத்தால்தான் அதன் விளைவுகளான கர்மம், பிறவி, துக்கம் ஆகியவை அறும். அந்தச் சூக்ஷ்ம பந்தங்கள் ஸ்தூல வடிவெடுத்துக் கர்மங்களாக வெளிப்படுகின்றன.

இருபத்தாறு ஆங்கில அக்ஷரங்களை வைத்து உலகில் உள்ள ஊர்கள் அனைத்துக்கும் சுருக்கமான பெயர்கள் வைத்துள்ளார்கள்.

இதேபோல இவ்வுலகில் உள்ள சகல ஜீவ ராசிகளின், உடல்கள் பஞ்சபூதங்களின் சேர்க்கையால் ஆனவை. மன அமைப்பு சத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களின் கலவையாகும். ஸ்தூல அமைப்பில் இரண்டு பொருள்கள் ஒன்றுபோல் இருப்பதில்லை. மனம் மிகவும் சூக்ஷ்மமானது. ஜன்மந்தோறும் சரீர அமைப்பு முற்றிலும் மாறி அமைகிறது. மன அமைப்பு முன் ஜன்ம சம்ஸ்காரங்களுடன் கூடியதாக இருக்கிறது; முன் வினைப் பயன்களைத் துய்ப்பதற்கு ஏற்றதாக அமைக்கப்பட்டிருக்கிறது.

பசுக்களை ரக்ஷிக்கின்ற சபையின் உறுப்பினர் ஒருவர் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளை நன்கொடை வசூல் செய்துதர வேண்டினர். அதுசமயம் மத்திய இந்தியாவில் பஞ்சத்தினல் மக்கள் வெகுவாக இறந்தனர்; எஞ்சியிருந்தவர்களும் மிகவும் அவதியுற்று வாழ்ந்து வந்தனர். 'அம்மக்களுக்குக் கோரக்ஷக சங்கம் என்ன பணிவிடை செய்கிறது?' என்று சுவாமிஜி கேட்டார். அதற்கு அம்மனிதன் 'மக்கள் தங்கள் கர்மபலனினல் சாகிருர்கள், ஊழ்வினைப்பயனல் அவதியுறுகிருர்கள், அவர்களுக்கு நாம் என்ன செய்யக்கிடக்கிறது? கோமாதாவைக் காப்பதுதான் நம் கடமை' என்ருர். 'ஓ மனிதனே! அந்த வினைப் பயன் தத்துவம் கோமாதாக்களுக்கும் உண்டன்ருே! அவைகள் விஷயத்தில் அது வேறு விதமாக இருக்கக்கூடுமா? எந்தக் கோமாதாதான் உன்னைப் பெற்ருளோ! இந்துக்களின் கர்மம், ஊழ்வினை, விதிக்கொள்கை மனிதனுக்கு இரக்கம் காட்டாத இதயமுடையவர்களாக உங்களை ஆக்கிவிட்டிருக்கிறது. கர்ம தத்துவத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும்' என்ருர் சுவாமிஜி.

இன்றும் மக்கள் கர்மதத்துவத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. நோய் வருகிறது, உடல் ஊனமாகிறது, வறுமை வருகிறது, மனைவி மக்கள் சரியாகஇல்லை, சுற்றத்தார் இணக்கம் சரியாக இல்லை, தொட்டகாரியம் விளங்குவதில்லை, வியாபாரத்தில் நஷ்டம், பிறர் பகைமை— இப்படி ஒவ்வொருவருக்கும் பல துன்பங்கள் வருகின்றன. இவைகள் எல்லாம் நம் பழவினைகளின் பயன்களாக வருகின்றன என்பதை மக்கள் நினைத்துப் பார்ப்பதில்லை. அதன் விளைவாகப் பாபகாரியங்கள் செய்வதற்கு அஞ்சும் மனப்பான்மை போய்விட்டது. லஞ்சம், கலப்படம், பதுக்கல், கொள்ளை லாபம், விபசாரம், பொதுச் சொத்துக்களைக் களவாடுதல், நாசம் செய்தல், சூதுவாதுகள் ஆகியவைகள் அதிகமாகி வருகின்றன. இவைகள் பஞ்சமகாபாபங்களைச் சேர்ந்தவை. இவைகளின் விளைவாக வரும் ஜன்மங்கள் மட்டமானவையாக இருக்கும். பாபத்தையும் பாதரசத்தையும் ஜீரணம் பண்ண முடியாது என்கிற உண்மை மனதில் பட்டால் இவ்வளவு பாபத்தில் இறங்கமாட்டார்கள். கர்ம தத்துவத்தைப் புரிந்துகொண்டால், தீவினையச்சம் உண்டானல் சமூகத்தில் பல நன்மைகள் உண்டாகும்.

ஊழ்வினை, ஊழ்வினை, என்று சொல்லி யாரும் மனத் தளர்வு அடையக்கூடாது, ஊழ்வினைக்கு வலிவு உண்டு, அது அனுபவிக்காமல் தீராது. அதனல் என்ன? அதை அனுபவித்துக்கொண்டிருப்பதற்கிடையில் நாம் புது வினைகளைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். இந்தப் புதுவினைகளை நாம் உணர்ந்து, முயன்று நல் வினைகளாக்கினல் நாம் கோருகிற விரும்புகிற புதிய நல் வினைப்பயன் உண்டாகாதா? அதன் வலுவினல் மேலும் தீவிர, உத்தம, ஆத்ம சாதகர்கள் ஆவோம். ஆகையால் மனத் தளர்வு வேண்டாம். எத்தகைய துன்பம் வரினும் வரட்டும். அதை அமைதியாக நாம் ஏற்றுப் பழகுதல் ஆத்மசாதனத்தின் முதல்படியாகும். அதற்குமேல் கடவுள் கிருபையால் நாம் நல்வினை ஆற்றுவோமாக. அஸ்திவாரத்துக்கு மேல் விரும்பியவண்ணம் அழகிய கட்டடம் எழுப்புவது போன்று சீலம் நிறைந்த, தர்மமான, அழகான, தெய்வீக வாழ்வைக் கடவுள் அருளால் உருவாக்குவோம். இந்தச் சுதந்திரத்தைக் கடவுள் ஜீவனுக்கு அளித்திருக்கிருர். ஊழ்வினை என்ன செய்யும்? அது தன்போக்கில் செயல்படட்டும். குரு கிருபையால் புதிய நல்வாழ்வு பாரமார்த்திக வாழ்வு வாழ்வோம் என்று மனதில் ஊக்கம் கொள்ளுங்கள்.

பரிணமவாதம், பரிணமக்கொள்கை (Law of evolution) என்று ஒரு கொள்கை இருக்கிறது. தசாவதாரங்கள் இக்கொள்கையை நன்கு

விளக்குகின்றன. முதல் முதல் உயிர் நீரில் தோன்றுகிறது. அது மச்சாவதாரம். பிறகு அது நீரிலும் நிலத்திலும் வசிக்கிற உயிராகப் பரிணமிக்கிறது. அது கூர்மாவதாரம். பிறகு அதிகம் நிலத்திலும் சிறிது நீரிலும் அதாவது சேற்றிலும் வசிக்கிற உயிராகப் பரிணமிக்கிறது. அது வராக அவதாரம். பிறகு நிலத்தில் மட்டும் வசிக்கிற விலங்காகிறது. அது நரசிம்மாவதாரம். இனி சிறிதுசிறிதாக மானுட உடல் அமைப்பு உருவாகிறது. அது வாமனாவதாரம். கோபம், பொறுமை, பராக்கிரமம், பழிதீர்த்தல், போன்ற அசுர, ராக்ஷச, மிருக குணங்கள் வாய்ந்த மனிதனாகிறது. அது பரசுராமாவதாரம். அடுத்துத் தீமைகள் அற்ற எல்லா அருங்குணங்களும் வாய்ந்த நரோத்தமன் ஆகிறது. அது ராமாவதாரம். அதன் பிறகு மானுட சரீரத்தில் வாழும் தெய்வமாகிறது. அது கிருஷ்ணாவதாரம். ஒன்பதாவது அவதாரம் புத்தாவதாரம். பிறகு இயற்கை சுருங்கி, சம்ஹாரமாகி அவ்யக்த நிலைக்குப் போகிறது என்பதைக் கல்கி அவதாரம் காட்டுகிறது. மீண்டும் இதே போல சிருஷ்டி துவங்குகிறது. ஜடம் சேதனமாக மாறுகிறது. பிறகு சேதனம் படிப்படியாகப் பிரகாசம்பெற்றுப் பரம்பொருள் ஆகிறது. சிற்றுயிர் பேருயிராகிறது. அதாவது ஓரறிவு உயிர் படிப்படியாக ஆறு அறிவு உயிராகப் பரிணமிக்கிறது என்று விஞ்ஞானி சொல்லுகிறான். உலகத்தை ஒரு வட்டமாக வரைகிறோம். பிறகு அதற்குள் கண்டங்கள், சமுத்திரங்கள், மலைகள், நதிகள், ஊர்கள் இவைகளை வரைகிறோம். அதேபோன்று இவ்வுலகில் ஜீவ சிருஷ்டியின் உண்மை, முறைமை முழுவதும் பரிணாமக்கொள்கை என்னும் வட்டத்தில் அடங்கிவிடுகின்றன. மற்ற விளக்கங்கள் எல்லாம் இதன் விரிவுரையே ஆகும். இங்ஙனம் ஜீவனை மேலான ஜீவனாக, அதிக இந்திரியம் வாய்ந்ததாகப் பரிணமிக்கத் தூண்டும் சக்தி யாது? ஆசை, இன்பநாட்டம், அவன் உள்ளேயே மறைந்துகிடக்கும் தெய்வீக சக்தி. அந்தத் தெய்வீக சக்தியை எந்த மாயையாலும் மறைக்கமுடியாது. முடிவில் அது சுயஞ்ஜோதியாய், அருள்ஜோதியாய், அருட்பிரகாசமாய், சத்சித் ஆனந்தமாய் மிளிரும். ஆலம் விதை முளைத்துக் காலாந்தரத்தில் மன்னர்க்கிருக்க நிழல்தரும் பிரம்மாண்டமான ஆலமரம் ஆகிறது. அப்படி ஆவதினின்றும் யாரும் அதைத் தடுக்கமுடியாது. அதே போன்று ஜீவன் பரமாக மாறுவதினின்று யாரும், எதுவும் தடுக்கமுடியாது. அலகிலா விளையாட்டுடையானின் மறைக்கப்பட்ட ஒரு சிறு தெய்வ சக்தி, தெய்வாம்சம் ஜீவன் எனப்படுகிறது. அந்த நிலையில் அது ஆசையால் கவரப்பட்டு இன்பத்தை நாடித்திரிகிறது. தெரிந்தும் தெரியாமலும், புரிந்தும் புரியாமலும் பலவிதமான செயல்கள் செய்கிறது. அதற்கு வினைப் பயன் உண்டாகிறது. அதை அனுபவிக்கவும், புது முயற்சிகள் செய்யவும் அது புதிய புதிய பிறவிகள் எடுக்கிறது. நிலையற்றதில் திருப்தியடைந்திருக்க அதனால் முடியாது, சாத்தியப்படாது. ஆகையால் அது இடையறாத இன்ப நாட்டமாகிறது. சாசுவதமான பேரானந்தத்தை, தெய்வானந்தத்தை அடைந்தாலன்றி அதனால் ஓய்ந்திருக்கமுடியாது. புதிய புதிய முயற்சியில் அது அறிவும் அனுபவமும் பெறுகிறது; மேலாம் உண்மைகளை விளங்கிக் கொள்கிறது.

கர்மம் மனிதனைப் பந்தப்படுத்துகிறது; வினைப்பயன் விளைவிக்கிறது. ஆனால் ஒரு உயிரும் கர்மம் செய்யாது ஒரு க்ஷணமும் சும்மா இருக்கமுடியாது. அப்படியானால் வினைகளைச் செய்துகொண்டே புதிதாகப் பந்தப்படாமலும் பழவினைகளின் பந்தத்தை அறுப்பது எப்படி? இந்த விசாரம்தான் கர்மயோகம் எனப்படுகிறது. அமைந்த சூழ்நிலையை, ஏற்படுகிற கஷ்டங்களை அமைதியாக ஏற்று, சகிப்புடன் அனுபவித்தால் பழவினைகள் தீர்ந்துபோகின்றன. இனி ஆற்றும் கர்மங்களையெல்லாம் நற்கர்மங்களாக, தர்மமானவையாகச் செய்தால் புதிய நல்வினைப்பயன் உண்டாகிறது, புதிய ஊக்கத்துடன் சிரமமின்றி அருள் வழியில்செல்கிறான். பிறகு பற்றற்றுப் பிராரப்தம் தீரும்வரை இறைவன் ஆட்டுவித்த பிரகாரம் ஆடி இருவினையும் தீர்ந்து முக்தியாம் பெருநிலை அடைகிறான். காலில் தைத்துள்ள முள்ளை வேறு ஒரு முள்ளால் களைந்து எடுத்துவிட்டு இரண்டையும் தூக்கி எறிவது போன்று தீய கர்மங்களை நற்கர்மங்களால் அகற்றிப் பிறகு ஈசுவரார்ப்பணமாகச் செய்து இருவினைகளையும்

அகற்றவேண்டும். 'நீ பற்றற்றுக் கர்மம் செய். பலனில்பற்று வைக்காதே. என்னைச் சரணடை. நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். மேலாம் பதம் அடைவாய்' என்று கீதையில் கண்ணன் புகட்டுகிறார். 'பிரகிருதியினின்று உண்டான முக்குணங்கள் அழிவற்ற தேகியைத் தேகத்தில் பிணிக்கின்றன. ஜீவன் எப்பொழுது குணங்களுக்கு வேறான கர்த்தாவைக் காண்பதில்லையோ, குணங்களுக்கு மேலாகப் பரம்பொருளைக் காண்கிறானே அப்பொழுது அவன் பிரம்ம சொருபத்தை அடைகிறான். உடம்பை உண்டாக்கும் இம் முக்குணங்களைக் கடந்து பிறப்பு இறப்பு மூப்புத் துன்பத்தினின்றும் விடுபட்ட ஜீவன் மரணமிலாப் பெருவாழ்வு பெறுகிறான்' என்றும் புகட்டுகிறார். இவ்வுடலுக்குக் காரணம் குணம்; வினைக்குக் காரணம் குணம். வினைப் பற்று, ஆசை இவைகள் பிரவிருத்திச் சக்கரத்தின் பற்கள் ஆகின்றன. நல்வினையினால் புண்ணிய பலனும் நல்ல பிறவியும், தீவினையினால் பாபமும் கீழான பிறவியும் துன்பமும் உண்டாகின்றன.

சிருஷ்டி சூன்யத்தினின்று உண்டானதன்று. பிரளயத்தில் பிரபஞ்சம் அவ்யக்த நிலைக்குப் போய்விடுகிறது. திரும்பவும் சிருஷ்டி துவங்குகிறபொழுது மனிதன் தூங்கி அதே மனிதனாக எழுந்திருப்பது போன்று, விட்ட இடத்திலிருந்து அப்படியே பிரபஞ்சம் வியக்தமாகிறது இப்படியே மீண்டும் மீண்டும் முடிவில்லாது நடந்து வருகிறது.விதை முதலா, செடி முதலா, முட்டை முதலா, கோழி முதலா என்பன போன்று வினை முதலா பிறவி முதலா என்கிற கேள்வி எழுகிறது. புத்திபூர்வமாக விடை காண முடியாத பிரச்னை. நாம் இப்பொழுது பிரத்யக்ஷமாகக் காண்கின்ற இரண்டு உண்மைகள் இருக்கின்றன. பிறவியினால் வினை மிகுகிறது, வினையினால் பிறவி வளர்கிறது. இவ்வுண்மைகளை அறிந்துகொண்டு நாம் நல்வாழ்வில் ஈடுபடுவோம்.

புத்தர் தன் முன்ஜன்மங்களைப்பற்றித் தியானம் செய்தார். அப்பொழுது ஒன்றன்பின் ஒன்றாக, வரிசையாக ஐந்நூறு முன் பிறவிகள் அவருக்குப் பின்னோக்கித் தெரிந்தன. அவற்றிற்கும் பின்னால் இருப்பவை அவருக்கு எட்டவில்லை; இருளில் மறைந்தன போன்று இருந்தன. அவர் நாயாக, குரங்காக, யக்ஷனாக, அரசனாக, வேலைக்காரனாக, குடியானவனாக எப்படியெல்லாமோ பிறந்திருந்தார். ஆனால் எல்லா வாழ்விலும் அவர் பிற உயிர்களின் பொருட்டுத் தியாகமே செய்து மடிந்திருந்தார். அதன் விளைவாகப் புத்தராகப் பிறந்தார். ஒரு மகானைத் தயாரிப்பதற்கு, தோற்றுவிப்பதற்கு இத்தனை பிறவிகள் தேவையாய் இருக்கின்றன.

திரு எறும்பூர், திரு ஆனைக்கா திருப்புல்லாணி என்று எறும்பு, யானை, சிலந்தி, கருடன் ஆகியவைகள் கடவுளை வழிபட்டு முக்தியடைந்த க்ஷேத்திரங்கள் உள்ளன. நம் புராணங்களில் நகுஷன் (பாம்பாக), கபந்தன், விராதன் (அசுர சரீரம்) போன்ற மேல் பிறப்பாளர் சாபத்தால் கீழ்ப்பிறவி பெற்றனர் என்று வருகிறது. பிறகு சாபவிமோசனம் அடைந்தனர். கிருஷ்ணன் உரலில் கட்டப்பட்ட போது சாபத்தினால் விருக்ஷ சரீரம் பெற்றிருந்த இரண்டு தேவகுமாரர்களுக்குச் சாப விமோசனம் அளித்தார். அகல்யை கல்லாகப் போகும்படி சாபம்பெற்று ராமன் திருவடி ஸ்பரிசத்தால் அவள் சாபவிமோசனம் அடைந்தாள்.

ஜகதீச சந்திரபோஸ் ஸ்தாவரங்களுக்கு உணர்ச்சி உண்டு, அவைகள் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றன, மகிழ்கின்றன, துக்கப்படுகின்றன, அன்பை உணர்கின்றன என்றெல்லாம் கருவிகள் மூலமாக விளக்கினார். தினம் பூமியின் சொந்தக்காரன் வயலைச் சுற்றிப் பார்த்தால் பயிர்கள் மகிழ்கின்றனவாம். சங்கீதத்தால் அவைகள் அதிக விளைவு தருகின்றன என்று இப்போது கண்டுபிடித்திருக்கிறார்கள். சூரிய வெளிச்சம் உள்ளபக்கம் கிளைகளைத் தென்னைமரம் அனுப்புகிறது, சத்தும் நீரும் உள்ளபக்கம் வேரை அனுப்புகிறது. ஸ்தாவரங்களைப்பற்றி இவ்வுண்மைகள் நமக்குத் தெரிந்தவையே. நாயைத் தபால், காய்கறி வாங்கிவரும்படி பழக்கலாம். நண்பர் வீட்டிற்குச் சாமானோ, கடிதமோ நாய் மூலம் அனுப்பலாம். நாய் நம் வீட்டைக் காக்கும். அதைப் போல நன்றியுள்ள ஜீவன் இல்லை. யஜமானனின் உயிரை, செல்வத்தை, குழந்தையை நாய் காப்பாற்றிய சம்பவங்கள் பல இருக்கின்

றன. மாட்டுடன் பேசிக்கொண்டே உழவன் உழுகிறுன். அது அன்பை உணர்கிறது. குதிரை தன் யஜமானனைக் காக்க ஓடித் தன் உயிரை விட்டதாகக் கதைகள் படிக்கிறோம். புலி, சிங்கம் போன்ற கொடிய விலங்குகளும் சர்க்கஸில் குறித்த காரியங்களைச் செய்யப் பழக்கப்படுத்தப்படுகின்றன. குரங்காட்டி சொற்படி குரங்கு கரணம் போடுகிறது; கரகம் ஆடுகிறது. குடுகுடுப்பைக்காரன் சொற்படி மாடு தலையாட்டுகிறது. யானைப்பாகன் சொற்படி யானை குனிகிறது, நிமிர்கிறது, சலாம் போடுகிறது, காசு வாங்கித் தருகிறது. கிளி பேசுகிறது. பாம்பு மகுடிக்கு முன் ஆடுகிறது. காக்கையும் நரியும் எவ்வளவு தந்திரமுள்ள பிராணிகள் என்பது நமக்குத் தெரியும். அவைகள் யாவும் அறிவு, உணர்ச்சி இவற்றின் செயல்கள் ஆகும். ஆனல் அவைகள் மிகவும் சிறிய அளவில், திட்டமிட்ட எல்லைக்குள் செயல்படுகின்றன. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் போன்றவர்களுக்கு இவ்வுலகில் அனைத்தும் சின்மயமாக இருப்பது தெரிகின்றது. பறவைகளும் இறைவனை வணங்குகின்றன என்று அவர் பகர்ந்துள்ளார். அறிவும் உணர்வும் எங்கு இருக்கின்றனவோ அங்கு பாபம் புண்ணியம் ஆகிய வினைப்பயனும் வந்துவிடும்.

ஒரு முனிவருக்குக் குற்றம் இல்லாமலேயே மரண தண்டனை கிடைத்தது. அவரைக் கழுவில் ஏற்றினர்கள். ஆனல் அவர் சாகவில்லை. அவர் சாகாததைப் பார்த்து அவரை இறக்கிவிட்டார்கள், மன்னிப்பு வேண்டினர்கள். அவர் அரசனையோ மக்களையோ கோபிக்கவில்லை. நேராக யமதர்மராஜனிடம் போனர். ‘இத்தகைய தண்டனை அனுபவிக்கும்படியாக நான் என்ன தப்புச் செய்தேன் ?’ என்று கேட்டார். ‘ நீங்கள் சிறுவயதில் பட்டுப்பூச்சிகளைப் பிடித்து இம்சித்து விளையாடினீர்கள். அதற்காகத்தான் இந்தத் தண்டனை’ என்று யமன் விளக்கினன். ‘அறியாத வயதில் செய்த இச் சிறு குற்றத்திற்காக இவ்வளவு பெரிய தண்டனை அளித்திருக்கிறுய். பூலோக வாழ்க்கையில், மானுட வாழ்வின் துன்ப துயரங்கள் உனக்குச் சரியாகத் தெரியவில்லை. நீ மானுடனுகப் பிறந்து அதை நன்கு அறிந்துவா’ என்று முனிவர் யமனுக்குச் சாபமிட்டார். இந்தச் சாபத்தின் விளைவாகவே யமன் விதுரராகப் பிறந்தான். மக்களின் பாபபுண்ணியங்களின் கணக்குகளை, வினைப் பயன்களின் கணக்குகளை யமதர்மராஜனின் மந்திரி சித்திரகுப்தன் முறையாகவைத்திருக்கிறுன் என்று நம் புராணம் விளக்குகிறது. கர்மபயனை முறையே நான் வழங்குகிறேன் என்று ஸ்ரீ கிருஷ்ணபகவான் சொல்கிறுர். இயற்கையின் மாருத நடைமுறையை இங்ஙனம் விளக்குகிறுர்கள். எல்லா உயிர்களும் வினைப்பயனை அனுபவிக்கவே பிறந்துள்ளன என்பதை இப்போது ஓரளவு நாம் அறிந்துகொள்ள முடிகிறது.

முதலில் சொல்லப்பட்ட பிறவிப் பாகுபாடுகளை இப்போது ஓரளவு புரிந்துகொள்ளலாம். புலியை விளக்குவதற்கு அது பூனை போன்று இருக்கும் என்று ஆசிரியர் உபமானம் சொல்கிறுர். இரவில் கண் தெரிதல், மீசை, மாமிசம் சாப்பிடுதல், கால்நகங்களை உள்ளே இழுத்துக்கொள்ளுதல், சப்தமில்லாமல் நடத்தல், பாய்தல் போன்ற அம்சங்கள் அவ்வுபமானத்தில் ஒத்திருக்கின்றன. ஆனல் உருவத்தில் பூனை சிறியது, புலி பன்மடங்கு பெரியது. நிறத்திலும் வித்தியாசம்இருக்கிறது. இப்படி உபமானம் எப்பொழுதுமே பூரணமாக ஒத்து இருக்காது; பெரும்பாலான அம்சங்களை விளங்கிக்கொள்ள உதவும். அதேபோன்று வினைக்கொள்கை, பரிணும வாதம் உண்மையே. அதை ஸ்தூலமாக விளக்கி இன்ன செடி இன்ன பாப கர்மபலன், இன்ன உயிர் இன்ன பாபகர்ம பலன், இன்ன மனிதன் இன்ன பாபம் அல்லது புண்ணிய கர்மபலன் என்று ஸ்தூலப்படுத்தி விளக்கும்போது சிறு குறைபாடுகள் இருக்கலாம், அல்லது விளங்காமல் இருக்கலாம். அதைப் பொருள்படுத்த வேண்டியதில்லை. உண்மையை விளங்கிக்கொண்டு நாம் வாழ்க்கையைச் செம்மைப்படுத்த முயலவேண்டும். மேலோர் அதைத்தான் நம்மிடம் எதிர்பார்க்கின்றனர். அருள்நாட்டம்கொண்ட, கடவுள் பித்தம் கொண்ட, மனதைக் கடவுள்பால் பறிகொடுத்த உத்தம ஜீவனுகப் பிறக்க நாம் முயலவேண்டும்; பெருவிருப்பம் கொள்ளவேண்டும் என்பது தீர்மானம், சித்தாந்தம்.

---

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

சுந்தரர் பாடிய பாடல் வருமாறு:

''அழுக்கு மெய்கொடு உன்திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படற்பாலது ஒன்றுஆனுல்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்
பிழைப்பன் ஆகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால்
மற்றுநான் அறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என்கனுக்கு ஒருமருந்து உரையாய்
ஒற்றியூர் எனும்ஊர் உறைவானே.''

திருவொற்றியூரில் எழுந்தருளியுள்ள இறைவனே! அழுக்கு நிறைந்த இந்த உடம்புடன் உனது திருவடியை அடையவேண்டிய இழிந்த நிலை எனக்கு ஏற்பட்டு விட்டது. இந்த இழிநிலையும் நான் அடையத்தக்கதுதானு! அப்படி அடைய நேர்ந்தால், ஒளியை இழந்து விட்ட என் கண்களுக்கு ஊற்றக் கூடிய மருந்தையாவது நீ சொல்லவேண்டும். பசு விடத்தில் பாலை விரும்புகின்றவர்கள், பசு இடுகின்ற சாணத்தையும் எடுத்துத் தூய்மை செய்வார்கள். அதுபோல, நீ என் குற்றங்களை நினைத்து என்னை இகழவேண்டாம்; எல்லா உயிர்களிடத்திலும் இருக்கக்கூடிய நல்ல குணம் என்னிடத்திலும் இருக்கிறது. அதைக் கருதியாவது நீ என்னை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்; நான் எந்தத் தவறு செய்தாலும் உன் திருவடிக்கு ஒருநாளும் தவறு செய்ய மாட்டேன். வாழ்க்கையில் நெறி தவறிச் சென்றுவிட நேர்ந்தாலும், அதற்காக வருத்தப் பட்டு, அந்தத் தவற்றிலிருந்து என்னை விடுவிக்குமாறு உன் திருப்பெயரையே நான் கூறி வேண்டுவேனே அன்றி வேறு ஒன்றையும் நான் அறியமாட்டேன் என்கிறுர் சுந்தரர்.

''அழுக்கு மெய்'' என்று சுந்தரர் சொல்கிறுர். எதனைச் சொல்லுகிறுர்? அழுக்கு அக அழுக்கு புற அழுக்கு என இருவகைப்படும். புற அழுக்கு உடலுக்கு மேலே உள்ள அசுத்த நிலை. தோலுக்கு மேலே உள்ள புற அழுக்கை உரிய பொருளைக் கொண்டு சுத்தப்படுத்திஞல் நீங்கிவிடும். உடம்புக்குள்ளே பெருங்குடல், சிறுகுடல் பகுதிகளில் உள்ள அழுக்கை உரிய மருந்துகளை உட்கொள்வதன் மூலம் நீக்கி விடலாம்.

அக அழுக்கில் மற்ருென்று மன அழுக்கு. வேண்டாத, ஒதுக்கித் தள்ள வேண்டிய தீய சிந்தனைகள் எல்லாம் அழுக்குகளே. அந்த அழுக்கு நிறைந்த மனம் அழுக்கு மனம். அழுக்கு மனத்தைத் தூய்மைப்படுத்துவது எப்படி? சான்ருேர்களின் அறவுரைகளைச் செவிமடுப்பது; சான்ருேர்களை மதித்து நடந்து அவர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளுவது, சான்ருேர்களின் நூல்களை நன்கு பயின்று தெளிவு பெறுவது ஆகிய நற்செயல்கள் வாயிலாக மனத்தில் நிறைந்துள்ள அழுக்கைப் போக்கலாம்.

இங்கே சுந்தரர் இந்த மூன்றுவகை அழுக்குகளைப் பற்றிக் குறிப்பிடுகிருரா? இல்லை. ஏன்? இம் மூவகை அழுக்குகளையும் போக்கிவிட முடியும். போக்கிவிடக் கூடிய அழுக்கை வைத்துக் கொண்டிருக்கமாட்டார். அப்படி வைத்துக் கொண்டிருப்பதும் கேடு தரும். எனவே, இவ்வகை அழுக்கைச் சுந்தரர் இங்கே சொல்லவில்லை.

கை, கால், கண் முதலிய புற உறுப்புகள்; மனம், சித்தம், புத்தி முதலிய கரணங்கள் (அக உறுப்புகள்) ஆகியவற்றை உடைய மெய்யை (உடம்பை) அழுக்கு மெய் என்று சுந்தரர் இங்குக் குறிப்பிடுகின்ருர்.

உடம்பில் இருக்கக்கூடிய புற உறுப்புக்களும், மனம், புத்தி, சித்தம் முதலிய அக உறுப்புக்களும் உடைய மெய் எப்படி அழுக்கு மெய் ஆகும்? அழுக்கான செயல்கள் அனைத்தும் செய்வதற்குக் காரணமாக இருப்பவை இந்த அக, புறக் கருவிகள். எனவே, அழுக்கான கருவிகள் அமைந்த மெய் அழுக்கு மெய் எனப்பட்டது. அழுக்கு மெய்யுடன் வாழ்வதற்கு எந்தச் சான்ருேர்களும் விரும்பமாட்டார்கள். அதற்காக ஏற்கனவே அமைந்துவிட்ட கை, கால் முதலிய உறுப்புகளையோ, மனம், புத்தி, சித்தங்களையோ என்ன செய்துவிட முடியும்? ஒன்று செய்யலாம். அதாவது நல்வழிப்படுத்தலாம். எப்படி நல்வழிப் படுத்துவது? கை, கால் முதலிய புற உறுப்புகளை நல்ல

செயல்களில் ஈடுபடும்படி செய்யலாம். மனம், புத்தி, சித்தங்களை நல்ல விஷயங்களைச் சிந்திக்கும்படி செய்யலாம்.

புற உறுப்புக்களாகிய வெளிக்கருவிகளும், உட்புறக் கருவிகளாகிய கரணங்களும் தீய செயல்களைச் செய்வதற்கு ஆதாரமாக அமைந்துவிடுகின்றன. ஆகவே இவற்றை உடைய உயிரோடு கூடிய உடம்பை (ஸ்தூல உடம்பு) அழுக்கு மெய் என்று சுந்தரர் இங்கே குறிப்பிடுகின்றார்.

கருவி, கரணங்கள் இல்லாத தூய நுண் உடம்பே (சூட்சும உடல்) அழுக்கு அற்ற மெய் ஆகும். கருவிகரணங்களைப் பெற்று விட்டது எனது இந்த உடம்பு; தவறு செய்து விட்டேன்; இந்த அழுக்கு மெய்யோடு உனது திருவடிகளை அடைய வேண்டிய நிலை எனக்கு ஏற்பட்டு விட்டது எனச் சுந்தரர் வருந்துகின்றார்.

பசுவில் இருந்து பால் வேண்டும் என விரும்புகின்றவர்கள், சாணம் முதலியவற்றை வாரி எடுத்துத் தூய்மைப் படுத்தவும் தயங்க மாட்டார்கள். அது போன்று, இறைவா! என் போன்ற அடியார்களிடத்தில் நல்ல பண்புகளை வரவழைக்கவேண்டும் என்பதற்காக என்னிடமுள்ள தீய குணங்களையெல்லாம் ஏற்றுக்கொண்டு பொறுத்தருள்வாயாக. நான் தவறுகள் பல செய்கின்றேன் ஆனாலும், உன் திருவடிகளை வணங்குவதற்கு ஒருநாளும் தவறியதில்லை. வாழ்க்கை நெறிகளில் இருந்து நான் தவறினாலும், உனது திருநாமத்தையே நான் எப்போதும் சொல்லிக்கொண்டிருப்பேனேயன்றி வேறு எதுவும் அறியேன். என் தவறுகளை மன்னித்து, என் கண்களுக்குப் பார்க்கச் சக்தியாக ஒளியைக் கொடு. அப்படிக் கொடுக்காது போனாலும், ஒளியைப் பெறக் கூடிய மருந்து இட்டுக் கொள்ளவாவது ஒரு வழியைச் சொல்லுக என வேண்டுகின்றார் சுந்தரர்.

''நான் பல குறைபாடுகளை உடையவன்; இருந்தாலும் உன்னை ஒருபோதும் மறக்க மாட்டேன்; எனக்கு அருள் செய்தல்வேண்டும்'' என்பதுதான் இப்பாடலின் பொதுவான கருத்து.

''என்னிடம் பக்தியும் இல்லை; யோகமும் இல்லை; எனக்குச் செல்வமும் இல்லை; எனது மனம் உன் பாதகமலங்களில் நித்தியவாசம் பண்ணக் கிருபை புரிவாய்'' என்கிறார் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்.

சான்றோர்களின் கருத்து எப்போதும் ஒற்றுமையுடையதாகத்தானே இருக்கும்!

ஆன்மா என்று சொல்லக் கூடிய உயிர் உணர்வு உடையது. உலகத்தில் உள்ள பொருள்களையெல்லாம் கண்டு, அப்பொருள்கள் இப்படிப்பட்டவைஎன உணரக்கூடிய உணர்வு ஆன்மாக்களிடத்தில் உண்டு. பொருள்களைப் பற்றிய உணர்வு (objective consciousness) சிலவகை இயல்பு உடைய ஆன்மாவுக்கு நாள்தோறும் தெளிவு அடைந்துகொண்டே வரும். அப்படித் தெளிவு பிறந்து வரும் நிலையில், ''யான் இதனை அறிகிறேன்'' என்ற உணர்வு வரும்.

இந்த வாசகத்தைக் கவனியுங்கள்; ''யான் இதனை அறிகிறேன்'' — யான் அறிகிறேன்; இதனை அறிகிறேன் என இருவகையாகப் பிரிக்கப்படும். யான் அறிகிறேன் என்று சொல்லும்போது, ஆன்மா தன்னைத்தானே அறிந்து கொள்கிறது. இவ்வாறு, தன்னைப் பற்றி உணர்வு ''தன் நோக்கு உணர்வு'' ( தற்பிரகாசம் – self consciousness ) எனப் படும்.

''இதனை அறிகிறேன்'' என்று சொல்லும் போது – உலகப் பொருள்களை – புறப்பொருள்களை உணரக்கூடிய உணர்வு (பரப் பிரகாசம்– (objective awareness) உண்டாகிறது. (இது ஆன்றோர் கூறிய கருத்து.) இங்கே சுந்தரர் என்ற உடம்பில் ஆன்மா புகுந்து, உலகத்தில் பிறந்து, பிறப்பு நிலையில் முக்குண வசத்தால் முறை பிறழ்ந்து உலகப் பொருள்களைப் பற்றி உணரத் தொடங்கியது. தனுவும் (உடம்பு), கரணங்களுமே தான் எனத் தவறாக உணர்ந்து அவற்றின் வசப்பட்டு நின்றது. அந்நிலையில் தான் சுந்தரர் திருமணம் புரிந்துகொண்டார்.

பிறகு, பழைய ஊழ்வினை வசத்தாலும், இறைவனின் திருவருள் வந்து கூடுகின்ற காரணத்தாலும் சுந்தரரின் ஆன்மாவுக்குத் தன்னைப்பற்றிய உணர்வு ஏற்படுகிறது. ''ஆன்மாவாகிய தான் வேறு; உலகப் பொருள்கள் வேறு; உலகியற் பொருள்களைக் கண்டு

தெளிவடைவதற்கு இறைவன் கொடுத்துள்ள தனு கரணங்கள் வேறு; தான் வேறு; யாண்டும் நிலையான செம்பொருளைக்கண்டு உணருவதுதான் உண்மையான அறிவு; செம்பொருளை அடைவதற்குக் கருவி கரணங்களோடு கூடிய இவ்வுடம்பு தடையாக இருக்கிறது'' என்றெல்லாம் எண்ணியே சுந்தரர் தமது உடம்பை, ''அழுக்கு மெய்'' எனக்கூறுகின்றார்.

''வையகம் முற்றும் மாமழை மறந்து
வயலில் நீர்இலை மாநிலம் தருகோம்
உய்யக் கொள்க மற்று எங்களை என்ன
ஒளிகொள் வெண்முகிலாய்ப் பரந்து எங்கும்
பெய்யும் மாமழைப் பெருவெள்ளம் தவிர்த்தும்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டு நின்திருவடி அடைந்தேன்
செழும்பொழில் திருப்புன்கூர் உளானே.''

''சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள சிவலோகநாதனே! நிரம்பிய மழை பெய்யாததால் இந்த ஊரில் வயலில் நீர் இல்லாமல் போய்விட்டது. நிலத்தை உனக்கு எழுதி வைக்கிறோம்; மழைபொழியச் செய் என்று திருப்புன்கூர் மக்கள் வேண்டிக் கொண்டார்கள். உடனே மேகத்தைத் திரட்டி மழை பொழியச் செய்தாய். மழை நிற்காமல் பொழிய, பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து அழிவை ஏற்படுத்தியது. இதைக் கண்டு வருந்திய மக்கள் மழையை நிறுத்தும் படிச் செய்தால், மேலும் பன்னிரண்டு வேலி நிலத்தை உனக்கு எழுதி வைப்போம் என்று வேண்டிக் கொண்டார்கள். அவர்கள் வேண்டியவாறே அருளி நிலத்தைப் பெற்றாய்; உனது திருவடியடைந்தேன் என் குறை தீர்ப்பாய்'' என வேண்டுகின்றார் சுந்தரர்.

சுந்தரர் தம் குறைகளைத் தீர்க்கும் பொருட்டு இறைவனிடம் வேண்டுகின்ற பொழுது, தமது காலத்தில் ஏற்பட்ட ஒரு சம்பவத்தை எடுத்துக் காட்டுகிறார்.

அதாவது, மழையே பெய்யாமல் இருந்தது; பிறகு அளவுக்கு மீறிப் பெய்து, வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி மிகுந்த துன்பத்தை விளைவித்தது. பிறகு இறைவன் அருளால் தீர்ந்தது என்று வெள்ளம் வந்த செய்தியைக் கூறுகிறார் சுந்தரர்.

ஆக, வெள்ளம் வந்து துன்பம் விளைவிப்பது எந்தக் காலத்திலேயும் நடக்கக்கூடிய நிகழ்ச்சி தான் என்பது தெரிய வருகிறது.

அண்மையில், காவிரியாற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து வந்து திருச்சிராப்பள்ளியையும், திருவரங்கத்தையும் படுத்தியபாடு அறிவோம்.

இதே நிகழ்ச்சி முன்பும் நடந்தது. ஸ்ரீரங்கம் கோவிலில் உள்ள பல கல்வெட்டுகளுள், கி. பி. 1545 இல் (சக ஆண்டு 1467-தமிழ் விசுவாவசு) பொறிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. விஜயநகர மன்னர் வீரபிரதாபசதாசிவராயர் காலத்தில் இக் கல்வெட்டு கொடுக்கப்பட்டுள்ளது.

ஒலிக்குத் திருவேங்கடய்யங்கார் என்பவர் அரங்கநாதருக்குத் திருவிடையாட்டமாக (திருமாலுக்கு நிவந்தமாக) நிலதானம் அளித்தார். அந்த நிலத்தைக் காவிரியாற்று வெள்ளம் மூழ்கடித்துக்கொண்டு வந்தது. அந்த நிலத்தைக் காப்பாற்றுவதற்காக யந்திர ஸ்தாபனம் செய்தார்கள். காவிரியாற்றின் வடகரையில் நாணல் கொண்டுவந்து நட்டார்கள். வடக்குக் கரையில் நாணல் கொண்டு வந்து நடவும் வெள்ளம் தெற்குக் கரைப் பக்கம் ஒதுங்கியது. நாணல் கொண்டுவந்து நட்டு, திருமாலின் நிலத்துக்குச் சேதம் ஏற்படாதபடி வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டவர் நாராயணஜீயர் என்பவர்.

வெள்ளப் பெருக்கெடுத்து வருவது, மக்களுக்குத் துன்பம் தருவது, வெள்ள நிவாரணப் பணி செய்வது என்பது காலம்தோறும் நடந்து வருவது சுந்தரர் பாடலாலும், கல்வெட்டுச் செய்தியாலும் தெரிய வருகிறது.

மழை பெய்யாமல் வறட்சி ஏற்படுமாறு செய்தவனும் இறைவனே; மழை பெய்வித்து வெள்ளச் சேதம் ஏற்படுமாறு செய்து, அத்துயரைத் துடைத்தவனும் இறைவனே. இச்செயல்கள்மூலம் இறைவன் தனது அகடித கடன சக்தியை (அளப்பரிய ஆற்றலை) மக்களுக்கு உணர்த்துகிறான்.

இறைவன் தான் செய்த துன்பத்திற்குத் தானே பரிகரிப்பு முறை நீதி (commutative justice) வழங்கியவன் ஆகிறான்.

---

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[ 38ஆம் பக்கத் தொடர்ச்சி ]

கர்நாடக மாநிலத்தில் ராஜராஜேஸ்வரி, சாமுண்டீஸ்வரி, ஸ்ரீ சாரதாபீடம் ஆகிய மூன்றும் சிறப்பானவை என்பார்கள். சாமுண்டீஸ்வரி தேவியின் பாத கமலங்களில் தஞ்சமடைந்தவர்களாகச் சாந்தாஸ்ரமத்தில் இரவு நன்கு தூங்கினோம். சாமுண்டிமலைக்கு மேலே போகும் நடைபாதையின் பக்கம், மலை அடிவாரத்தில் இந்த ஆச்ரமம் அமைந்துள்ளது. விடியற்காலம் எழுந்து ஐந்து மணிக்கு நஞ்சன்கூடு புறப்பட்டோம். இது மைசூர்–ஊட்டி ரோட்டில் இருபது மைல் தூரத்தில் உள்ளது. பஸ் பயணத்தின்போது பள்ளியெழுச்சி பாடி பஜனை செய்துகொண்டு போனோம். அங்கு கபில நதியில் நீராடிவிட்டுப் பஜனை செய்துகொண்டே ஆலயத்திற்குச் சென்றோம். தமிழ் நாட்டுப் பாணியில் அமைந்த அழகான கோபுர தரிசனம் கிடைத்தது. ஆங்கு எழுந்தருளியுள்ள இறைவன் நஞ்சுண்டேசுவரர்; அம்பாள் பார்வதி. சிவலிங்கம் பளபளப்பாக உள்ளது. அந்தச் சிவாலயத்திற்குள்ளேயே விஷ்ணுவுக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. ஸ்ரீ தேவி பூதேவி சமேதராய் அவர் எழுந்தருளியுள்ளார். இங்கு நந்தி, சந்நிதிக்கு நேர் இல்லாமல் சற்று விலகியிருக்கிறது. பரம்–ஜீவன்–ஜகத் என்று வேதாந்தம் சொல்லுவதைச் சைவத்தில் பதி–பசு–பாசம் என்பார்கள். பசுவாகிய ஜீவன் எப்போதும் இறைவனைச் சுமந்தவனாய், கடவுளையே நினைந்தவனாய் இருக்கவேண்டும் என்கிற கருத்தை நந்தி விளக்கிக் கொண்டிருக்கிறது. சற்று விலகி இருப்பதற்கு, இறைவன் எங்கும் இருப்பதை உணர்ந்து விலகியிருப்பதாக அர்ச்சகர் விளக்கம் சொன்னார். ஆலயங்களிலும், நமது நித்திய பூஜை, பஜனை, சுவாத்யாயம், சத்கதா காலக்ஷேபம் ஆகிய கடவுள் சம்பந்தமான விஷயங்களில் ஈடுபட்டிருக்கும் போதும் இறைவனைப்பற்றி நினைத்திருப்பது பெரும்பாலும் சாத்தியமாகிறது; அது எளிதாகவும் இருக்கிறது. ஆனால் உலக விவகாரம் பார்க்கும் போது நாம் இறைவனை நினைக்கிறோமா? அப்போதும் இறைவனை நினைத்திருக்கப் பழகவேண்டும் என்பதை விலகியிருக்கும் நந்தி விளக்கிக்கொண்டிருக்கிறது.

தெற்குப் பிரகாரத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும் சிலைகள், தமிழ் நாட்டில் எந்த ஆலயத்திலும் இல்லாத அளவு பெரியதாக, செய்து வைத்துள்ளார்கள். சுற்றிலும் சாத்தியப்பட்ட இடங்களில் எல்லாம் புராண வரலாறுகள் மிக அழகான படங்களாக வரைந்து மாட்டியிருக்கிறார்கள். ஐக்கிய வணக்கம் செய்துவிட்டு மீண்டும் தர்சனமும், சற்று நிதானமாகப் புராணக்கதை சித்திரங்களையும் பார்த்து விட்டுச் சாந்தாச்ரமம் வந்து காலை சிற்றுண்டி அருந்தினோம்.

பத்து மணிக்கு மலைமேலே உள்ள சாமுண்டீஸ்வரி ஆலயத்திற்குப் புறப்பட்டோம். எங்களில் பாதிப்பேர் பஸ்ஸில் நேர் சந்நிதிக்குப் போய்விட்டார்கள். மற்றுமுள்ள பாதிப்பேர் பஜனை செய்துகொண்டே மெல்ல நடந்து, படிஏறிப் போனோம். அதில் தாய்மார்கள் பத்துப்பேர் இருந்தனர். யார் மிக மெதுவாக நடக்கிறாரோ அவரது வேகம்தான் எங்கள் அனைவரது வேகமும் ஆகும். ஆகையால் சுமார் இருபத்தைந்து அடி தூரத்திற்குள் அனைவரும் இருப்போம். இயற்கைக் காட்சிகளைக் கண்டு களித்துக்கொண்டே போனோம். படி செம்மையாக இல்லை. ஆனால் மரங்கள் அடர்ந்திருக்கின்றன. ஒன்றரை மணி நேரத்தில் கோவிலை அடைந்துவிட்டோம். சுமார் நூறு படிகள் ஏறியதும் நிழலுள்ள இடத்தில் சற்றுக் களைப்பாறுவோம். அப்போது ஒருவர் ஒரு கருத்துச் சொல்லவேண்டும். ஒரு அம்மையார் ஒரு கருத்துச் சொல்கிறார். கேளுங்கள்: "இம்மலையின் மீது ஏறிய ஞாபகம் என்றைக்குமே, இம்மலைபோல், பசுமையாக மனதில் இருக்கும்படி சுவாமி செய்து வைத்துவிட்டார்கள். கீழே மரம் செடி கொடி என்று வெவ்வேறாகத் தென்படுகின்றன. மலைமேல் ஏறி மேலே போகப் போக அவ்வேற்றுமைகள் மறைந்து ஒரே பசுமையாகக் காட்சி கொடுக்கிறது. அதேபோன்று

மனம் பக்தியில், பண்பில் உயர உயர வேற்றுமைகள், பேதங்கள் எல்லாம் நீங்கி உலகமெல்லாம் சமமாகக் காணமுடிகிறது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன உபதேச மொழியை இப்போது பிரத்யக்ஷமாகப் பார்க்கிறோம். சுவாமி அவர்கள் உற்சாகப்படுத்தி இந்தச் சரீரத்தை எப்படியோ மேலேகொண்டு வந்துவிட்டார்கள். மனமும் மேலே போகக் கதை சொல்கிறார்கள், நம்மைச் சிந்திக்க வைக்கிறார்கள். பக்தியில் நாம் மேலே போக அவர்கள் செய்யும்முயற்சி பயனடையச் செய்ய வேண்டியது நம் கடமை. அம்பாள் அதற்கு அருள்புரிவாளாக." ஜெய் பராசக்திக்கு என்று ஒருவர் கோஷமிடுகிறார். அனைவரும் ஜெய் என்று சொல்லிக்கொண்டு எழுந்திருக்கிறோம். அடுத்த முறை ஒருவர் ஞானப்பழக் கதை சொன்னார். அதற்கு அடுத்து ஒருவர் "பகவானே, உனக்கு ஒரு நமஸ்காரம். உன் மாயைக்கு ஒரு நமஸ்காரம். மாயையில் இனி, எப்போதும் நான் அகப்பட்டுக்கொள்ளாமல் இருக்க அருள் செய்" என்று நாரதர் ஸ்ரீ கிருஷ்ணனிடம் பிரார்த்தித்தார் என்று சொல்லி முடிக்கிறார். அப்போது எங்களுக்கும் ஞானவிழிப்பு வருகிறது. தொடர்ந்து நடந்து மேலே போய்க்கொண்டிருக்கிறோம். நடைபாதை பஸ் பாதையைக் கடந்து மேலே போகிறது. பக்கத்தில் ஒரு பெரிய நந்தியம்பெருமானின் சிலை உள்ளது. அவரை வலம்வந்து வழிபட்டோம். அங்குள்ள குழாயில் இனிய தண்ணீர் வருகிறது. அதைக் குடித்து தாக சாந்தி செய்துகொண்டு மேலே போனோம். மலை உச்சிக்கு வந்துவிட்டோம். அகலமான மைதானம் தென்படுகிறது. அதன் நடுவில் அம்பாள் கோவில். அழகான கோபுரம். கோவிலுக்கு அருகில் கத்தியுடன் மகிஷாசுரன் சிலை பெரிதாக இருக்கிறது. பஸ்ஸில் வந்து சேர்ந்து எங்களுக்காகக் காத்திருந்த அன்பர்களும், தாய்மார்களும் எங்களை வரவேற்றார்கள். பஜனை பாடிக்கொண்டே தர்சனத்திற்கு உள்ளே போனோம். அம்பாள் சிறியவடிவம். மிக அழகாக இருக்கிறாள். அவள் பர்வத ராஜகுமாரி, அகிலாண்டேஸ்வரி அல்லவா! நிறைய நகைகளால் அம்பாளை அலங்கரித்துள்ளார்கள். ஒரு மண்டபத்தில் ஐக்கியவணக்கம் செய்தோம். அன்னை சாமுண்டி அக்ஞானம் நிறைந்த மகிஷாசுரனுக்கு ஞானம் அருளிய புண்ணிய பூமி மைசூர். அன்னையுடன் அவன் போர் புரிந்து அவளால் சம்ஹரிக்கப்பட்டவன். அவன் அன்னையிடம் சரணடைந்தான். அன்னையுடன் ஒன்றுகிவிட்டான். திரோதானம், அவித்தை, அக்ஞானம், மாயை ஆக விளங்குபவள் அவளே. அனுக்கிரஹம், அருள்பாலிப்பவளும் அவளே. 'அம்பா, என்னிடம் உள்ள மகிஷாசுரனை, தமோகுணத்தை, அறியாமையை நீ சம்ஹாரம் பண்ணுவாயாக. என்னையும் நீ ஏற்று அருள்புரி. எல்லாம் நீயே. நான் உனக்குரியவனே, நான் உனக்குரியவனே' என்று ஒவ்வொருவரும் பிரார்த்தித்தோம். ஐக்கிய வணக்கத்தை முடித்துக்கொண்டு மீண்டும் ஒருமுறை தர்சனம் செய்துவிட்டு அனைவருமாகப் பஸ்ஸில் சாந்தாச்ரமம் வந்து பகல் உணவு சாப்பிட்டோம்.

மாலை 3-30 மணிக்கு மைசூர் ராஜா அரண்மனை பார்க்கச் சென்றோம். மைசூர் ராஜபரம்பரையினர் கடைசியாக வாழ்ந்த இடம் அது. இப்போது அதன் ஒரு பகுதியில் அவர்கள் வசித்து வருகிறார்கள். அழகிய பகுதிகளையெல்லாம் அப்படியே பாதுகாத்துப் பொதுமக்கள் பார்க்க அனுமதிக்கிறார்கள். மற்ற பகுதிகளில் அரசாங்க அலுவலகங்கள் உள்ளன. இந்த அரண்மனைக்கு ஜகன்மோகன் அரண்மனை என்று பெயர். கொலுசாமான்கள், மயூரமண்டபம், விருந்தினரை உபசரிக்கும் மண்டபம், தர்பார் நடக்கும் இடம் எல்லாம் பார்த்தோம். சுவரில் வரையப்பட்டுள்ள சித்திரங்கள் தத்ரூபமாக இருக்கின்றன. எல்லாம் ஆச்சரியப்படும்படியான அழகுதான். அப்படங்களினிடையே ஒன்றில் நாம்எங்கு நின்று பார்த்தாலும் சித்திரத்திலுள்ள மனிதர்கள் நம்மையே பார்க்கிறார்கள். அதிலுள்ள யானையும் நம்மையே பார்க்கிறது. உடல் வாழ்க்கை நிலையற்றது, செல்வம் நிலையற்றது, அதிகாரம், பதவி, ராஜ்ய சம்பத்துக்கள் எல்லாம் ஒருநொடிப் பொழுதில் கைநழுவிப் போய்விடும். இக் கருத்து அந்த அரண்மனையைப் பார்க்கும் பொழுது உண்டாகிறது.

ஆர்ட் காலரி பார்க்கச் சென்றோம். இது ராஜகுடும்பத்தினர் வாழ்ந்த பழைய அரண்

மனை. இதற்கு லலிதமஹால் என்று பெயர். முன்னால் பூச்செடிகள் அழகாக வைக்கப்பட்டிருக்கின்றன. உள்ளே அரசர்கள் உபயோகித்த சிம்மாசனங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. ஏராளமான சித்திரங்கள் இருக்கின்றன. அகல் விளக்கு ஒன்றை அணையாது ஒரு பெண் கையால் மறைத்து எடுத்துச் செல்வது போன்று வரையப்பட்டிருக்கும் சித்திரம் மிகவும் நன்றாக, தத்ரூபமாக இருக்கிறது. அரை மணி, முழுமணி அடிக்கும்போது போர்வீரர்கள் அணிவகுத்து நடந்து செல்லும் அமைப்பு உள்ள கடிகாரத்தைப் பார்த்தோம். இந்த அரண்மனையைச் சுற்றிக் கடைகளும் வீடுகளும் தெருக்களும் உண்டாகிவிட்டன. அரண்மனையின் முன்பு உட்கார்ந்து அவரவர் மனதில் பட்ட அதிசயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டு மாலைச் சிற்றுண்டி சாப்பிட்டோம்.

மாலை 6-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுலம் சென்றோம். மாணவர்களின் மாலைப் பிரார்த்தனையில் கலந்துகொள்ளும் பாக்கியம் கிடைத்தது. கோவிலும் மூர்த்தியும் அழகாக இருந்தன. மாணவர்கள் பக்கவாத்தியங்களுடன் செய்த பிரார்த்தனை நன்றாக இருந்தது. ஏழு மணிக்கு அவர்கள் நடத்தும் வேதாந்த கல்லூரிக்குப் போனோம். நுழைவாயிலில் விவேகானந்தர் சிலையும் கோவிலுக்குள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிலையும் உள்ளன. வெள்ளைப் பளிங்கில் செய்யப்பட்ட மிக அழகிய வடிவங்கள் அவை. அந்த ஸ்தாபனத்தின் நடைமுறைகள் யாவற்றையும் சினிமாப் படம் எடுத்துள்ளார்கள். கமார்ப்புகூரில் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு ஆலயம் கட்டி திறப்புவிழா நடந்த காட்சிகளை எல்லாம் சினிமாப்படம் எடுத்துள்ளார்கள். அவ் இரண்டையும் அன்றையதினம் வேதாந்தக் கல்லூரியின் மாணவர்களுக்குக் காட்டுவதாகத் திட்டம் இருந்தது. எங்கள் வருகைவரை அதைத் தாமதம் செய்து நாங்கள் சென்றதும் திரையிட்டுக் காட்டினார்கள். அவர்களது சொந்த உபயோகத்திற்குச் சினிமாத் தியேட்டர் ஒன்று அங்கே இருக்கிறது. அவர்களது பல்வேறுதுறை வகுப்பு மாணவர்களுக்கும் அங்கே கல்வி சம்பந்தமான படங்கள் காண்பிக்கிறார்கள். ஆச்ரம நடைமுறைகளைப் பார்க்க முடியவில்லையே என்று இருந்தோம். அதை நேரில் பார்ப்பதுபோன்றே படத்தில் பார்த்தோம். கமார்ப்புகூரில் ஸ்ரீ ராமகிருஷ்ணரது கோவில் திறப்பு விழாவில் நேரில் கலந்துகொண்டது போன்றே இருந்தது. பிறகு இந்த ஸ்தாபனங்களையெல்லாம் நடத்தும், துறவியர் வாழும், ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்திற்குச் சென்றோம். கோவிலைச் சாத்திவிட்டார்கள். ஆயினும் வெளியிலிருந்து வணங்கி வந்தோம். இந்த ஸ்தாபனங்கள் யாவும் நூற்றிருபத்தைந்து ஏக்கர் பரப்புள்ள இடத்தில் ஒரு தனி உலகம் போல் இயங்கிக் கொண்டிருக்கின்றன. மிகப்பெரிய ஸ்தாபனம். பலவிதமான கைங்கரியங்கள் செய்து வருகிறார்கள். இவை யாவற்றையும் ஸ்தாபித்தவர் ஸ்ரீமத் சாம்பவானந்த சுவாமிகள் ஆவார்கள். அவர்கள் காலத்திற்குப் பிறகு இப்போது நிர்வகித்துவரும் தலைவர் ஸ்ரீமத் சுவாமி சோமனாதானந்தர் அவர்களைத் தரிசித்து ஆசி பெற்று வந்தோம். மிகவும் மனநிறைவோடு சாந்தாச்ரமம் வந்து ஐக்கிய வணக்கம் செய்து இரவு உணவு சாப்பிட்டுத் தூங்கினோம்.

20-9-77 அன்று விடியற்காலம் 4-30 மணிக்குச் சாந்தாஸ்ரமத்திலிருந்து அனைவரிடமும் விடை பெற்றுக்கொண்டு தலைக்காவேரிக்குப் புறப்பட்டோம். பஸ்ஸிலேயே பள்ளியெழுச்சி பாடிபஜனை செய்தோம். மேற்குத் தொடர்ச்சி மலையில் குடகுப் பகுதியில் காவேரி உற்பத்தியாகிறது. செப்டம்பர் மாதம் தென்மேற்குப் பருவக்காற்று ஓய்ந்து மழையும் ஓய்ந்திருந்த சமயம். அதனால் எங்குப் பார்த்தாலும் செடி கொடிகள் மரங்கள் எல்லாம் செழித்துப்பசுமையாக இருந்தன. இயற்கை எழில் தாண்டவமாடியது. காபி எஸ்டேட்டுகள் வழியாகப் போய்க்கொண்டிருந்தோம். இடையிடையே தூறல் விழுந்தது. வானம் மந்தாரமாக இருந்தது. ஒலி பெருக்கியில் ஒரு கருத்து சொல்லப்பட்டது. அஃதாவது: "பசுபதிநாதத்தில் ஐந்துமுகம் கொண்ட லிங்கம் பார்த்தோம். நாலு திசைகளும் மேலும் கீழும் எல்லா இடங்களும் அவனே. அவன் பார்வையினின்று நாம் எந்த இடத்திலும்மறைந்திருக்கமுடியாது. அவன் கண்காணிப்பில் உலகனைத்தும் இருக்கின்றன; அவன் சர்வ வியாபி என்பது ஒரு பொருள். பஞ்சபூதங்களாக இருப்பவனும்

அவனே என்பது மற்றொரு பொருள். தமிழ்நாட்டில் பஞ்சபூதங்களுக்கும் ஐந்து க்ஷேத்திரங்களில் ஐந்து லிங்கங்கள் வைத்துள்ளார்கள். திருவானைக்காவில் இருப்பது அப்புலிங்கம். பஞ்சபூதங்களில் நீர் ஒன்று. நாம் நீரைக் கடவுளாக வழிபடுகிறோம். நீர் இன்றி அமையாது உலகு என்பது குறள். நீர் ஆறாகப் பெருகிவந்து உலகை ஊட்டி வளர்ப்பதால் அதற்கு நாம் தாயின் ஸ்தானம் தருகிறோம். இந்தியாவில் சப்த புண்ணிய நதிகள் இருக்கின்றன. அவைகளுள் காவேரி ஒன்று. எந்த நதியில் குளித்தாலும் சப்தநதிகளையும் அங்கே எழுந்தருளும்படி பிரார்த்திப்பது ஹிந்துக்கள் வழக்கம். அக்கருத்து அடங்கிய மந்திரம் வருமாறு: ''ஓம் கங்கேச யமுனே சைவ கோதாவரி சரஸ்வதி நர்மதே சிந்து காவேரி ஜலேஸ்மின்சன்னிதிம் குரு.'' இம்மந்திரத்தைப் பதம் பதமாகச் சொல்ல அனைவரும் அதைத் திருப்பிச் சொன்னார்கள். 'இவ்வுலக வாழ்க்கையே ஒரு கனவு போன்றது, பாவனமயமாக இருக்கிறது. அப்படி இருப்பதில் தெய்வீகமான பாவனைகள் நமது சாதனத்துக்கு உதவுகின்றன, மனதைத் தூய்மைப்படுத்துகின்றன. சப்த புண்ணிய நதிகளின் ஆசியால்தான் நாம் செழிப்பாக வாழ்கிறோம். உடல் வளர்ந்ததோடு மட்டுமன்று நமது பண்பாடு, நாகரிகம், சாஸ்திரங்கள் எல்லாம் அந்நதிகளின் கரைகளில் வளர்ந்துள்ளன. நம் ஆலயங்கள் எல்லாம் அவைகளின் கரைகளில் உள்ளன. ஆகையால் சப்தநதிகளும் ஹிந்துவின் வாழ்வில் ஒன்றிப் போனவைகள். தலைக்காவேரியில் இம்மந்திரத்தைச் சொல்லி நீராடுங்கள். வேறு யாரும் நமக்கு சங்கல்பம் செய்துவைக்க வேண்டியதில்லை. இதுவே காவேரி அன்னை வழிபாடாகும்'' என்று யாத்திரிகர்களுக்குக் காவேரியின் புனிதத் தன்மை எடுத்துச் சொல்லப்பட்டது.

பஸ் கோணிகோபல் என்கிற இடத்தில் நின்றது. இருபுறமும் காபிச் செடிகள் நன்கு காய்பிடித்திருந்தன. ரோட்டிலிருந்து வயல், காபிச் செடிகள் வழியாக இரண்டு பர்லாங்கு தூரம் உள்ளே போனோம். அங்கே சிவபுரி ஆச்ரமம் உள்ளது. அது ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகளுடையது. அங்கு அவர்களுக்கு ஐம்பத்தைந்து ஏக்கர் விஸ்தீரணமுள்ள காபி எஸ்டேட் உள்ளது. அங்குச் சாது ஒருவர் இருந்து நிர்வகித்து வருகிறார். அங்கு ஐக்கிய வணக்கம் செய்து காலைச் சிற்றுண்டி சாப்பிட்டோம். எங்களுக்கு உணவு ஏற்பாடு செய்வதற்காகப் பெங்களூரினின்று சாமான்களுடன் ஒருசமையல் ஆளும் ஒரு சுவாமிகளும் அங்கு வந்திருந்தார்கள். சாதுமஹாத்மாஒருவரின் அன்புக்கு நாம் என்ன பாக்கியம் செய்துள்ளோம் என்று அனைவரும் எண்ணினோம். அவர்கள் உபசரிப்பால் வயிறும் நிறைந்தது, மனதும் நிறைந்தது. மிக அமைதியான ஆச்ரமம், அழகான சூழ்நிலை. அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டோம்.

நல்ல காட்சிகளைப் பார்த்துக்கொண்டே போனோம். இரண்டு மலைச்சரிவுகள் கூடும் இடத்திற்குப் பஸ் போனது. இருபதடி சதுரமுள்ள சிறிய குளம். குளத்தின் ஒரு மூலையில் நாலடி உயரமுள்ள சிறு காவேரி அம்மன் கோவில். அன்னையின் பாதத்திலிருந்து நீர் கசிந்து வந்து குளம் பெருகி மறுகோடியில் சிறு வாய்க்காலாக ஓடிக்கொண்டிருக்கிறது. அக்குளத்தில் அனைவரும் மந்திரம் சொல்லிக் குளித்தோம். நீரின் குளிர்ச்சி உடலுக்குப் புத்துணர்ச்சி தந்தது. காவேரியைப் பற்றிய புனிதமான எண்ணங்கள் மனதுக்குப் பரம திருப்தியைத் தருகின்றன. நல்ல சம்ஸ்காரங்களுக்குப் புண்ணியம் என்று பெயர். நல்ல பாவங்களுக்குப் பாவசம்சுத்தி என்று பெயர். குளத்தில் குளித்தபின் காவேரி அம்மன் கோவிலுக்கு முன் நின்றால் அங்குள்ள பட்டர் மூன்று உத்தரணி காவேரி தீர்த்தம் விடுகிறார். அதை அருந்திவிட்டுக் காவேரி அம்மனைத் தரிசித்துவிட்டுக் கரையேறிவிட வேண்டும். இப்படிச் செய்வது அங்குள்ள பழக்கம். நாங்களும் அப்படியே செய்தோம். எல்லாரும் குளித்துவிட்டு உடை மாற்றிக்கொண்டு வயதில் முதிர்ந்தவர்களையும் சாதுக்களையும் வணங்கினார்கள். காவேரி அன்னையின் கோவிலுக்கு மேலே கணபதி கோவில், அகஸ்தீஸ்வரர் கோவில் உள்ளன. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் மஹாசமாதி அடைந்தபின் இவ்வுலகில் வாழ விரும்பாமல் தாமும் தம் தெய்வநாயகருடன் உயிர்விட ஸ்ரீ சாரதா

தேவியார் எண்ணினர். அப்போது ஸ்ரீ ராம கிருஷ்ணர் அன்னையார் முன் தோன்றி "உடல் அழிந்துபோகக்கூடியதுதானே. ஆத்மா அழி யாத பொருள் என்பது உனக்குத் தெரியாதா? நான் உன்னுடன்தான் இருக்கிறேன். நீ உலகுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளைச் செய்துவிட்டு இங்கு வருவாய்" என்று பணித் தார். அப்போது அவருக்கு வயது முப்பத்து மூன்று. அதற்குமேல் தம் தெய்வத்தின் உத் தரவை நிறைவேற்ற அவர் முப்பத்து நான்கு ஆண்டுகள் உடல் தாங்கியிருந்தார். உலகுக் குப் பணிவிடை செய்வதே மானுட ஜீவிதத் தின் உயர்ந்த குறிக்கோள் ஆகும். அதே போல அகஸ்தியர் தம் மனைவி லோபமுத்தி ரையை, "நீ உலகுக்குப் பயன்படுபவளாக ஆகவேண்டும். நதி ஆகிப் பிரவகிப்பாயாக" என்று பணித்தாராம். அவளே காவேரி ஆனள். தம் தெய்வநாயகனின் கட்டளையைக் காவேரி எப்படி நிறைவேற்றி வருகிறது என் பது நமக்குத் தெரியும். உலகுக்கு உபகார மான ஜீவிதமாக நமது ஜீவிதம் ஆக வேண் டும் என்கிற கருத்தைப் புராணம் பலவிதங் களில் புகட்டுகிறது. காவேரி மகாத்மியம் புகட்டும் பாடம் இதுவே.

இங்குள்ள நகரத்தார் சத்திரம் ஒன்றை ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் பொறுப்பில் விட் டிருக்கிறார்கள். அது ஆச்ரமமாகச் செயல்படு கிறது. அது கோவிலிலிருந்து ஒரு பர்லாங்கு தூரத்தில் இருக்கிறது. அங்கு ஐக்கியவணக் கம் செய்தோம். தோன்றியுள்ள அனைத்துக் கும் வித்தாக இருப்பது சிவம். பஞ்சபூதங் களாக விரிவடைந்திருப்பது சக்தி. அன்னை பராசக்தி இங்குக் காவேரி மாதாவாக எழுந் தருளியுள்ளாள். அவளை வழிபட்டோம். ஐக் கிய வணக்கத்தை முடித்துக்கொண்டு அங்குப் பகல் உணவு அருந்தினோம். நாங்கள் சாப்பிட் டுக்கொண்டிருக்கும்போது மிக அடர்த்தியாக மஞ்சு படர்ந்து பெரிய மழை பொழிந்தது. அங் கிருந்து விடைபெற்றுக்கொண்டு மாலை நான்கு மணிக்குப் புறப்பட்டோம். புனிதமான காவேரி யின் உற்பத்தி ஸ்தானம் ஹிந்துக்களுக்கு ஒரு முக்கியமான யாத்திரை ஸ்தலம் ஆகும். தலைக் காவேரியில் கோவில் நன்கு பராமரிக்கப்பட வில்லை. பாதைகள் சரியாக இல்லை. தங்கு மிடமோ, உணவுச்சாலையோ இல்லை. மனித னுடைய பண்பை, பக்தியை உயர்த்தக்கூடிய தெய்வீக, தீர்த்த ஸ்தலங்களை வசதியுள்ளவை களாக அரசாங்கம் செய்து வைத்தால் அதிகம் பேர் அங்கு வருவார்கள். அவர்கள் பக்தியில் மேலோங்குவதற்கு அவை உதவும். ஆறு மணிக்கு மெர்க்காரா வந்தோம். தென்னிந்தி யாவில் வருடத்தில் அதிகமான மழை பெய்கிற இடம் மெர்க்காரா. இங்கு எங்கள் சிற் றுண்டியை அருந்திவிட்டுக் காபி குடித்தோம். மழை பெய்துகொண்டிருந்தது. அங்கிருந்து புறப்பட்டு இரவு பத்து மணிக்குச் சுப்பிரமணி யர் க்ஷேத்திரம் வந்து சேர்ந்தோம். இங்கு முன் னேற்பாடு ஏதும் செய்துவைக்கவில்லை. முன் னேரத்தில் போய்ச்சேரவுமில்லை. ஒருவாறு ஒரு விடுதியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு யாத்திரிகர்கள் யாவரும் இரவு அங்கு நன்கு தூங்கினோம். (தொடரும்)

---

# செய்திகள்

### நிகழ்பவை

மார்ச்சு மாதம் 7ஆம் தேதி செவ்வாய்க் கிழமை மஹாசிவராத்திரி அன்று குருகுல மாணவர்கள் உபவாசம்இருந்து 24 மணிநேரம் அகண்டநாம பஜனை செய்வார்கள்.

மார்ச்சு மாதம் 10-ம் தேதி வெள்ளிக்கிழமை யன்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் திதி பூஜை. அன்று குருகுல மாணவர்கள் 24 மணி நேரம் அகண்ட நாமபஜனையும், பகல் 11 மணி முதல் 12 மணி வரை ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

மார்ச்சு மாதம் 12ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவரின் ஜயந்தி விழா தபோவனத்தில் சிறப் பாகக் கொண்டாடப்படும். அன்று காலை 6 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணதேவரின் திரு வுருவப் படத்தைத் திருப்பராய்த்துறை சிவா லயத்திற்கு நாம பஜனையுடன் குருகுல மாண வர்கள் ஊர்வலமாக எடுத்துச் செல்வார்கள். அன்று காலை 9 மணிக்குக் குருகுல மாணவர் களின் பெற்றோர் கூட்டம் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன உயர்நிலைப்பள்ளியில் நடை பெறும்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

## திருப்பராய்த்துறை-639 115, திருச்சிராப்பள்ளி மாவட்டம்

### 1976–77ஆம் ஆண்டு அறிக்கையின் சுருக்கம்

இந்த ஸ்தாபனம் 1942ஆம் ஆண்டில் துவக்கப் பெற்றது. பாரமார்த்திகத் துறையிலும், கல்வித்துறையிலும் இது பணியாற்றி வருகின்றது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரம்பரையைச் சேர்ந்த சந்நியாசிகள் இதை நிர்வகித்து வருகிறார்கள்.

**அந்தர்யோகம்**

ஆத்மசாதனம் பயில விரும்புபவர்களுக்கு இந்த அந்தர்யோகம் நன்கு பயன்பட்டு வருகிறது. மூன்றுநாள் அந்தர்யோகம், இரண்டு நாள் அந்தர்யோகம், ஒருநாள் அந்தர்யோகம் ஆகியவைகள் தமிழ் நாட்டில் ஆங்காங்கு நிகழ்ந்து வருகின்றன. நூறு ஊர்களுக்கு மேல் இந்த அந்தர்யோகத்தைப் பயன்படுத்தி வருகின்றன.

**குருகுல உயர்நிலைப்பள்ளி**

ஸ்ரீ விவேகானந்த வித்யாவனம் என்னும் பெயர் பூண்டுள்ள இப்பாடசாலை குருகுல முறையில் திருப்பராய்த்துறையில் நடைபெற்று வருகிறது. 530 மாணவர்கள் இதில் வாழ்க்கைப் பயிற்சி பெறுகின்றனர். ஆண்டு தோறும் சுமார் 60 பேர் S. S. L. C. பரீக்ஷைக்குச் சென்று பெரும்பாலும் எல்லாருமே தேர்வு பெறுகின்றனர். உடற்பயிற்சியிலும், விளையாட்டுப் போட்டிகளிலும் இப்பள்ளி திருச்சி ஜில்லாவில் முதன்மை பெற்றுவருகிறது.

**விவேகானந்த உயர்நிலைப்பள்ளி, ஆரம்பப்பள்ளி**

உள்ளூர் மாணவ மாணவிகள் வசதிக்காக இவ்விரு பள்ளிகளும் உள்ளூர் கோயிலுக்கு அருகில் தனித்தனி இடங்களில் நடாத்தப் படுகின்றன. உயர்நிலைப்பள்ளியில் 596 பேரும், ஆரம்பப்பள்ளியில் 618 பேரும், நர்ஸரி ஸ்கூலில் 71 குழந்தைகளும் பயிற்சிபெற்று வருகின்றனர். 96 ஏழைக் குழந்தைகளுக்கு நண்பகல் இலவச உணவு வழங்கப்படுகின்றது.

**கனரகமின்கலத் தொழிற்சாலை உயர்நிலைப்பள்ளி**

திருச்சிக்கு அருகாமையில் திருவெறும்பூரில் கனரக மின்கலத்தொழிற்சாலையாரால் இது நன்கு நிறுவப்பட்டுள்ளது. இதில் 1880 பேர் மாணவ மாணவிகள் பயிற்சி பெற்று வருகின்றனர். இதன் நிர்வாகம் இத்தபோவனத்தின் கண் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இப்பள்ளியை யொட்டி ஆரம்பப்பள்ளியும், நர்ஸரி ஸ்கூலும் இருக்கின்றன. அவைகளில் மொத்தம் 1332 பேர் பயிலுகின்றனர்.

**கந்தன் களிக்கூடம் — நர்ஸரி ஸ்கூல்**

திருச்சி, தில்லைநகர் கேப்டன் டி. என். ராமசுவாமி அவர்களின் இல்லத்தில் 1969ஆம் ஆண்டு முதல் இக்களிக்கூடம் நடாத்தப் பெற்று வருகிறது. இரண்டரை வயதுக்கு மேற்பட்ட சிறுவர்களும், சிறுமிகளும் நல்ல பழக்க வழக்கங்கள் பெறுதல், குதூகலமாக ஓடியாடி விளையாடுதல், நல்ல உடல் நலன் பெறுதல் ஆகியவைகள் இதன் நோக்கமாகும். 110 பேர் இக்களிக்கூடத்தில் இருக்கிறார்கள்.

இளம் வயதிலேயே குழந்தைகளுக்கு நல்ல வாழ்க்கைப் பயிற்சி தருதற்கும், பக்தி மனப்பான்மையைப் புகட்டுதற்கும் ஆங்காங்கு களிக்கூடங்களை நடாத்துதற்கு ஊக்கமளிக்கப்படுகிறது.

**விவேகானந்த கல்லூரி (குருகுல முறையில்)**

மதுரை மாவட்டம் சோழவந்தானையடுத்துத் திருவேடகத்தில் விவேகானந்த கல்லூரி ஆறு ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. இது குருகுலமுறையில் நடைபெற்று வருவது இதன் சிறப்பியல்பு ஆகும். மாணவர்களும் ஆசிரியர்களும் கல்லூரியில் சேர்ந்து வாழ்ந்து வருகின்றனர். மாணவர்களின் வாழ்க்கை அல்லும் பகலும் ஆசிரியர்களின் கண்காணிப்பில் இருக்கிறது. சீலம் நிறைந்த வாழ்க்கைப் பயிற்சியை மாணவர்கள் இனிது பெற்று வருகின்றனர். இக்கல்லூரியில் P.U.C. வகுப்பில் மூன்று பிரிவுகளும் B.A. (Economics), B.Sc. (Physics), B. Sc. (Zoology), B. Com. ஆகிய மூன்றாண்டு பட்ட வகுப்புகளும் நடைபெற்று வருகின்றன.

### தர்ம சக்கரம்

வாசகர்கள் இதைப்பற்றி நன்கு அறிந்திருக்கின்றனர். டிபாஸிட் சந்தா முறையில் 2356 பேரும், ஆண்டு சந்தா முறையில் 4830 பேரும் ஆக 7186 பேர் இப்பத்திரிகைக்குச் சந்தாதாரராக இருக்கிறார்கள்.

### பிரசுராலயம்

இது வெளியிட்டுள்ள நூல்களைப்பற்றி அன்பர்கள் நன்கு அறிவர்.

### தபோவன அச்சுப்பள்ளி

மாணவர்களுக்குப் பயிற்சி தருதற்கும், சமய சம்பந்தமான நூல்களைத் தயாரிப்பதற்கும் அச்சுப்பள்ளி ஒன்று நடத்தப்பட்டு வருகிறது.

### விழாக்கள்

சிறப்பாக ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தியும், சுருக்கமாக அன்னை ஸ்ரீ சாரதா தேவியார், சுவாமி விவேகானந்தர் ஜயந்திகளும், சமயக் குரவர்கள் பலருடைய திருநாட்களும் இங்குக் கொண்டாடப்பெற்றன.

### வைத்தியசாலை

குருகுல மாணவர் வசதிக்காகத் தகுதி வாய்ந்த டாக்டர் ஒருவரைக்கொண்டு இந்த வைத்தியசாலையைத் தபோவனம் நடத்திவருகிறது. பொதுமக்களும் இதில் இலவச சிகிச்சை பெறுகின்றனர். இவ்வாண்டில் மொத்தம் 19,603 பேர் சிகிச்சை பெற்றனர்.

### கிருஷி

தபோவனம் திருப்பராய்த்துறையிலும், கிளை ஸ்தாபனங்களிலும் சொந்த பூமியில் விவசாயம் செய்கிறது. ஸ்தாபனத்துக்குத் தேவையான உணவுப்பொருளில் பெரும்பகுதி இவைகளில் உற்பத்தியாகின்றது. மாட்டுப்பண்ணைக்குத் தேவையான தீவனம் விவசாயத்தில் கிடைக்கிறது.

### மாட்டுப் பண்ணை

இந்த ஸ்தாபனம் திருப்பராய்த்துறையில் நடத்தி வருகிற மாட்டுப்பண்ணையில் 117 கால் நடைகள் உள்ளன. குருகுலத்திற்குத் தேவையான பால் இம்மாட்டுப் பண்ணையினின்று கிடைக்கின்றது. திருவேடகத்தில் 75 கால் நடைகள் உள்ளன. பால் குருகுலக் கல்லூரிக்குப் பயன்படுகிறது.

### கிளை ஸ்தாபனங்கள்

இத் தபோவனத்தின் கிளை ஸ்தாபனங்கள் திருக்குற்றாலத்திலும், கோயமுத்தூர் ஜில்லாவில் சித்திரச் சாவடியிலும், மதுரை ஜில்லாவில் திருவேடகத்திலும், சேலம் நகரத்தில் சுவர்ணபுரியிலும் அமைந்துள்ளன.

### பொருளாதாரம்

உதகமண்டலம் திரு. அ. சதாசிவம் பிள்ளை சத் கைங்கரியத்துக்காகப் பத்துலக்ஷ ரூபாய் இத்தபோவனததிடம் ஒப்படைத்திருக்கிறார். இந்த நிதியைக்கொண்டு திருவேடகத்திலுள்ள விவேகானந்த கல்லூரி பயனடைந்து வருகின்றது. ஏழை மாணவர்கள் சிலர் இலவசக் கல்வி பெறுகின்றனர். அதிக நூல்கள் அடக்க விலைககு வெளியிடப் பெறுகின்றன.

கரூர் திரு. மு. வைரப்பெருமாள் செட்டியார் கல்வித்துறையில் பயன்படுத்துதற்காகத் தபோவன நிர்வாகத்தில் டிரஸ்ட் ஏற்படுத்தியுள்ளார்கள். இதுவரை இந்த டிரஸ்டிற்கு ரூ. 1,75 000 சேர்ந்துள்ளது.

மற்றும் பல அன்பர்கள் நிதி ஏற்படுத்தி அதினின்று கிடைக்கும் வருமானத்தைக் குறிப்பிட்ட கைங்கரியங்களைச் செய்ய ஏற்பாடு செய்துள்ளார்கள். அவ்வாறு இவ்வாண்டில் மட்டும் ரூ. 73 435-85க்கு நிதிகள் ஏற்படுத்தப் பெற்றுள்ளன. நிதிகளினின்று இவ்வாண்டு வந்துள்ள வருமானம் ரூ. 8 933-24.

இவ்வாண்டு நன்கொடையாக 1 47 427-61 வந்துள்ளது. மொத்த வரவு ரூ. 37 26 568-57, மொத்தச் செலவு ரூ 36 19 025-39. நிகர வரவு ரூ. 1 07 543-18. இத்தொகை கடன் திருப்பித்தரப் பயன்பட்டது.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்துக்குத் தரும் நன்கொடைகளுக்கு வருமான வரி 80 G விதிப்படி வரி விலக்கு உண்டு.

**சித்பவானந்த**
தலைவர்

# ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்கள்

## அளகாபுரம், சேலம்-636 004.

### *1976-77ஆம் ஆண்டு அறிக்கையின் சுருக்கம்*

**ஸ்ரீ ஸாரதா ஸமிதி**

துறவறத்தை அடிப்படையாகக் கொண்டு பாரமார்த்திகப் பெருவாழ்க்கையில் ஈடுபடுகிற மகளிர்களுக்காக ஸ்ரீ ஸாரதா ஸமிதி என்ற இந்த ஸ்தாபனம் 1955ஆம் ஆண்டு துவக்கப் பெற்றது. சேலம், சூரமங்கலம் — ஏற்காடு சாலைக்கு வட பகுதியில் இந்த ஸ்தாபனம் அமைந்துள்ளது. 1967ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி சங்கங்களின் சட்டத் தின்கீழ் இது பதிவு செய்யப்பெற்றுள்ளது. திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோ வனத்தின் தலைவர் சுவாமி சித்பவானந்தர் கண்காணிப்பில் இச்சங்கம் நடைபெற்று வரு கின்றது. திருப்பராய்த்துறை தபோவனத்தில் ஆடவர் துறவறத்துக்குப் பயிற்சி பெறுவது போன்று சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதியில் மகளிர் துறவறத்துக்குப் பயிற்சி பெற்று வருகின்ற னர். ஏழுபேர் துறவறம் பூண்டிருக்கின்றனர். அவர்களுக்குத் தலைவியாக இருப்பவர் யதீஸ்வரி ஸாரதாப்பிரியை ஆவார். விவாகம் செய்து கொள்ளாத கன்னிகைகளும், சந்தான மில்லாத இளம் விதவைகளும் இச்சமிதியில் சேர்ந்து பயிற்சி பெற்று வருகின்றனர்.

சேலத்திலுள்ள ஸ்ரீ ஸாரதா ஸமிதியின் அங்கத்தினர்கள் ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களை நிர்வகித்து வருகின்றனர்.

**ஸ்ரீ ஸாரதா வித்யாலயா**

இது ஓர் உயர்நிலைப்பள்ளியாக விளங்கு கிறது. 1371 மாணவிகள் இதில் பயிற்சி பெறு கின்றனர். ஆண்டு தோறும் 100 பேருக்கு மேல் S. S. L. C. பரீட்சைக்குச் சென்று அனை வரும் தேர்ச்சியடைகின்றனர். மாணவியர் விடுதியும் இதனுடன் இணைக்கப்பட்டிருக் கிறது.

**ஸ்ரீ ஸாரதா பாலமந்திர்**

ஆரம்பப்பள்ளி, பாலர் களிக்கூடம் (நர்ஸரி ஸ்கூல்) ஆகியவை இதனோடு இணைக்கப்பட் டிருக்கின்றன. சிறுவர்களும் சிறுமிகளும் சேர்ந்து 1650 பேர் இங்கு பயின்று வருகின்ற னர்.

**அநாதை இல்லம்**

ஆஸ்பத்திரியில் பிறந்து உற்றார்களால் புறக் கணிக்கப்பட்ட குழந்தைகளை ஸ்ரீ ஸாரதா ஸமிதி எடுத்து வளர்த்து வருகிறது. வயது வரும்பொழுது அவரவர்க்கேற்ற கல்வியும் தரப்பெறுகிறது.

ஆதரவற்ற வயோதிக மகளிர்களுக்காக ஓர் இல்லம் அலாதியாக நடைபெற்று வருகிறது. இதில் பதினைந்து பேர் இருக்கிறார்கள்.

**ஸ்ரீ ஸாரதா கல்லூரி**

இக்கல்லூரி 1961ஆம் ஆண்டில் துவக்கப் பெற்றது. இப்பொழுது இது நிறைநிலை அடைந்திருக்கிறது. வெறும் ஏட்டுக்கல்வியைப் புகட்டுவதில்மட்டும் இக்கல்லூரி கருத்தைச் செலுத்துவதில்லை. இந்தியப் பண்பில் தூய தெய்விக வாழ்க்கை முறையை மாணவிகளுக்கு நல்குவது இக்கல்லூரியின் குறிக்கோள் ஆகி றது. P. U. C. யிலிருந்து M. A. வரையிலும் எல்லா வகுப்புகளும் இருக்கின்றன. இவ் வாண்டு இதில் 1616 பெண்கள் பயிற்சி பெறு கின்றனர். இதற்கு மாணவி விடுதியும் உண்டு. அதில் 608 பேர் இடம் பெற்றுள்ளனர். பஜனை பண்ணுவது, கடவுள் வழிபாடு செய்வது, ராமாயணம் மஹாபாரதம் போன்ற தெய்விக நூல்களை ஆராய்வது வாயிலாக மாணவிகள் பக்திமதிகளாக உருவெடுத்து வருகின்றனர்.

**ஸ்ரீ ஸாரதா ஆசிரியைப் பயிற்சிக் கல்லூரி**

இக்கல்லூரி 1968-69இல் துவக்கப்பெற் றது. பாலாஜி நகரில் அமைந்துள்ள ஸ்ரீ ராம கிருஷ்ண தபோவனக் கட்டடத்தில் இக்கல் லூரி நடைபெறுகின்றது. 95 பெண்கள் ஆசிரியைகளாவதற்கு இங்கு பயிற்சி பெறு கின்றனர்.

### ஸ்ரீ ராமகிருஷ்ண ஸாரதா உயர்நிலைப்பள்ளி

இது சுப்ரமணிய நகரில் இருக்கிறது. 1988 மாணவ மாணவியர்கள் இங்கு கல்வி பெறுகின்றனர். இதையொட்டிய ஆரம்பப்பள்ளி ஒன்று உண்டு. அதில் 935 சிறுர்கள் படித்து வருகிறுர்கள்.

ஆக ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களில் பயிற்சி பெறுவோரின் எண்ணிக்கை 8244, விடுதியில் இருப்போர் 896, போதிப்பவர்கள் 303, மற்றவர்கள் 285 ஆகும்.

### மாட்டுப் பண்ணையும் கிருஷியும்

மாட்டுப் பண்ணையில் 57 கால்நடைகள் உள்ளன. ஆங்காங்கு காலியாக இருக்கும் இடங்களில் தோட்டப்பயிர் செய்யப்படுகின்றது. கழிவு நீர் சிறிதும் வீணுகாதபடி விவசாயத்திற்குப் பயன்படுத்தப்படுவதால் பயிர்களுக்கு நல்ல எரு கிடைக்கின்றது; மாடுகளுக்குத் தீவனமும் கிடைக்கின்றது.

### பொருளாதாரம்

முன்னுளைய ரயில்வே உபமந்திரி, பாரட்லா திரு. S. V. ராமசாமி செட்டியார் அவர்களின் சொத்துக்களைக் கொண்டு 'ராம்சீதா கல்வி டிரஸ்ட்' ஏற்படுத்தப்பட்டுள்ளது. பதினைந்து லக்ஷம் மதிப்புள்ள இச்சொத்துக்களினின்று வரும் வருவாய் ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. இதர நன்கொடைகள் இதுகாறும் இக்கல்வி ஸ்தாபனங்களுக்குச் சுமார் எண்பது லட்சம் சேர்ந்துள்ளது.

சேலம் ஜவஹர் மில்ஸ் மானேஜிங் டைரக்டர் திரு. M. A. பழனியப்ப செட்டியார் அவர்கள் அளித்த நன்கொடையினின்று குறைந்த படிப்புள்ளவர்களுக்குத் தொழிற் பயிற்சி அளிக்கப்படுகிறது.

சேலம் ஜில்லா வைகுந்தவாசியாகிய திரு. E. S. ரத்தினம் அவர்கள் ரூ. 70 000-00 வட்டியில்லாக் கடனுகத் தந்தார்கள். அதைக்கொண்டு ஸ்ரீ ஸாரதா கல்லூரி விடுதிக்கு உணவு மண்டபம் கட்டப்பெற்று உபயோகத்தில் இருக்கிறது.

சேலம் திரு. தி.ப. சுந்தரம் செட்டியார் அவர்களும் திரு. K. A. சஞ்சீவி செட்டியார் அவர்களும் ரூ. 50 000 முதலீட்டில் அத்வைத ஆச்ரம டிரஸ்ட்டை ஸ்ரீ ஸாரதா ஸமிதி நிர்வாகத்தில் ஒப்படைத்துள்ளனர். சுவர்ணபுரியிலுள்ள அத்வைத ஆச்ரமத்தை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்துக்குத் தந்துள்ளனர்.

மாணவிகளுக்கு உதவி செய்தற்பொருட்டு நிதிகள் உருவாக்கப்பட்டு வருகின்றன. அன்பர்கள் தங்கள் பெயரில் நிதி அமைக்கலாம். அந்த நிதியினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருவாயைக் குறிப்பிட்ட கைங்கரியங்களுக்கு இந்த ஸ்தாபனம் டிரஸ்டியாக இருந்து செய்து வருகிறது. அன்பர்கள் ஒவ்வொரு ஆண்டிலும் தமக்கு வாய்க்கும் வருவாயினின்று ஒரு பகுதியை இந்த நிதிக்கு ஒதுக்கி வைக்கலாம். சில ஆண்டுகளில் அதன் வடிவு பாராட்டத்தக்க பெரியது ஆகும்.

இத்திட்டத்தின்படி ஏற்கனவே நிதிகள் இருந்தன. இவ்வாண்டு நிதிகள் அமைக்க அன்பர்கள் ரூ. 1 96 928-00 தந்துள்ளார்கள். இப்பொழுது ரூ. 10 47 731-53 மதிப்புள்ள நிதிகள் உள்ளன.

நிதிகளினின்று இவ்வாண்டு கிடைத்துள்ள வருவாய் ரூ. 47 372-98. இதினின்று அநாதைக் குழந்தைகளுக்கு உணவு, உடை, புத்தகங்கள் வழங்கப்பெற்றுள்ளன; ஏழைக் குழந்தைகளுக்கு மதிய உணவு அளிக்கப்பெற்றிருக்கிறது; நன்றுகப் படிக்கிறவர்களுக்கும் விளையாட்டு வல்லுநர்களுக்கும் பரிசுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களுக்கு இவ்வாண்டு நன்கொடையாக வந்தது ரூ. 2 45 290-52, மொத்த வரவு ரூ. 51 09 856-36, மொத்த செலவு ரூ. 51 56 814-68. ஆக அதிகச் செலவு ரூ. 46 958-32. இத்தொகை ஏற்கனவே உள்ள கடன் பளுவைக் கூட்டியுள்ளது.

ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களுக்குத் தரும் நன்கொடைகளுக்கும், தம் பெயரால் ஸ்தாபனத்தில் நிதி அமைப்பதற்கும் வருமான வரி 80 G விதிப்படி வரி விலக்கு உண்டு.

சித்பவானந்த
தலைவர்

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

திருவாசகம்-மூன்றாம் பதிப்பு
பிரசார விலை ரூ. 14-00
ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு
பிரசார விலை ... 12-00
ஞானயோக விளக்கம் ... 8-00
ராஜயோக விளக்கம் ... 8-00
கர்மயோக விளக்கம் ... 7-00
பக்தியோக விளக்கம் ... 6-00
பரமஹம்சரின் பெருமை ... 6-00
விவேகானந்த விவரணம் ... 4-00
ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
விவேகானந்த உபநிஷதம் ... 4-00
கடவுளின் வடிவங்கள் ... 4-00
சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ
ஆறாம் பதிப்பு-பிரசார விலை ... 2-75
தினசரி தியானம்-பதினான்காம் பதிப்பு
(பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
கண்ணன் என்னும் கடவுள் ... 2-00

**தாயுமானவர் இயற்றிய**

பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
சுகவாரி ஷ்டி ... 3-00
கருணாகரக்கடவுள் ஷ்டி ... 2-00
மௌனகுரு வணக்கம் ஷ்டி ... 1-50
பரசிவ வணக்கம் ஷ்டி ... 0-50

விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
பஜனைப் பாடல்கள் ... 1-50
சந்நியாசி ... 1-25
குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
இராவண தத்துவம் ... 1-00
சகோதரி நிவேதிதை ... 1-00
ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
காயத்ரீ ... 1-00
வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... 1-00
அறம் வளர்த்த நம்பி ... 0-95
நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
நன்மக்களைப் பெறுதல் ... 0-80
தானவீரன் கர்ணன் (நாடகம்) ... 0-80

பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80
பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
இறை வணக்கம் ... 0-75
*ஆத்ம சக்தி ... 0-75
செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
*மனிதனது நிஜசொரூபம் ... 0-70
*சக்தி தத்துவம் ... 0-70
*சிவ தத்துவம் ... 0-70
பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
*ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
*ஆலய வழிபாடு ... 0-60
சைவன் யார்? ... 0-50
*சூரிய நாராயணன் ... 0-50
*முருகக் கடவுள் ... 0-50
*விஷ்ணு தத்துவம் ... 0-50
தெய்வீக மகிமைகள் ... 0-50
கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
தபோபலன் (நாடகம்) ... 0-40
*கணபதி ... 0-40
நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... 0-40
அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) ... 0-15

The Bhagavad Gita (9th Imp.) ... 15-00
The Indian National Education ... 8-00
Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
Ramakrishna Lives Vedanta ... 8-00
Facets of Brahman or The Hindu Gods ... 5-00
Daily Divine Digest (with plastic-cover) ... 4-20
Mahabharata (with plastic cover) ... 4-50
Ramayana (do) ... 4-00
The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 3-00
The Bhagavad Gita (Small Size) (With plastic cover) ... 3-00
Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
Holy Bible—In the Light of Vedanta ... 1-50
*Introducing the Gita ... 1-50
*Key to Higher Life ... 0-75
*The Teacher ... 0-60
*The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி Dt.

ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்திவிழா

# ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115, எலமனூர் ரயில்வே ஸ்டேஷன், திருச்சிராப்பள்ளி Dt.

அன்புடையீர்,

ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்திவிழா 1978 மார்ச்சு மீ 12ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலை 5–30 மணிமுதல் 8–30 மணிவரை இங்குக் கொண்டாடப்பெறும். நீங்கள் அனைவரும் அதில் கலந்துகொண்டு திருவருளுக்குப் பாத்திரமாவீர்களாக.

இங்ஙனம்,
சித்பவானந்த

## நிகழ்ச்சி முறை

**12—3—78** ஞாயிறு மாலை

5–30 மணிமுதல் 7 மணிவரை
குருகுல மாணாக்கர் ஆடல், பாடல், பேச்சு முதலியன
7-00 மணிமுதல் 8-30 மணிவரை குருகுல மாணாக்கர்களால்

**ஏகலைவ்யனின் குருபக்தி** என்னும் நாடகம்

தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. சிற்றுண்டிச்சாலை உண்டு.

---

*ஸ்பெஷல் ரயில்வண்டி வசதி*

ஸ்பெஷல் ரயில்வண்டி திருச்சி ஜங்ஷனில் சுமார் மாலை 3-30 மணிக்குப் புறப்பட்டு 4-30 மணிக்கு விழா ஆரம்பிக்குமுன் எலமனூர் வந்து சேரவும், இதே ஸ்பெஷல் ரயில்வண்டி, விழா முடிந்தபின் இரவு 9-05 மணிக்கு எலமனூரில் புறப்பட்டுத் திருச்சி ஜங்ஷனை 10-15 மணிக்கு அடையவும் ஏற்பாடு செய்யப்பெற்றுள்ளது.

---

## திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தில் அந்தர்யோகம்

*1978*ஆம் மார்ச்சு மாதம் 14, 15, 16 தேதிகளாகிய மூன்று தினங்களில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி இங்கு அந்தர்யோகம் நடைபெறும். இதில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் மார்ச்சு 13ஆம் தேதி இரவே நேரில் நாள் ஒன்றுக்கு ரூ. 4–00 விதம் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும். தாய்மார்களுக்குத் தனி இடவசதி உண்டு. பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக் குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள்.

## வாழ்க்கை முறை

| காலை | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | |
| எல்லாரும் ஒன்றுகூடி நாம ஜபம் | 5-00 | 5-30 |
| காவேரி ஸ்நானம் முதலியன | 5-30 | 6-30 |
| காலை தியானம் | 6-30 | 7-00 |
| சிற்றுண்டி | [illegible]-00 | |
| காலை உபந்யாசம் | 8-30 | 9-30 |
| மௌனம் | 9-30 | 10 30 |
| பஜனை | 10-30 | 11-30 |
| பூஜை, அர்ச்சனை | 11-30 | 12-00 |

| மாலை | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| போஜனம், ஓய்வு | 12-00 | 2-30 |
| மாலை உபந்யாசம் | 2-30 | 3-30 |
| தனியாக வாசித்தல் | 3-30 | 4-30 |
| பானம், யோகாசனம், உலாவல், நீராடல் முதலியன | 4-30 | 6-00 |
| நாம ஜபம், ஆரத்ரிகம் | 6-00 | 6-15 |
| தியானம் | 6-15 | 7-00 |
| இரவு போஜனம் | 7-00 | |
| சத் சம்பாஷணை | 8-30 | 9-30 |
| நித்திரை | 10-00 | |

உபந்யாசங்கள் :— யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். சத் சம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம்.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.